# கல்கி

குடும்பத்துடன் படிக்க

அடுத்த இதழில்
ஆரம்பம்...

## டாக்டர்
## சுதா சேஷய்யன்

வழங்கும்...



# ஸ்ரீ லலிதா

(லலிதா சகஸ்ரநாம விளக்கம்)

அற்புத ஆன்மிகத் தொடர்... வேதாவின்
கலைநயமிக்க படங்களுடன்!

கர்நாடக சங்கீதத்தில் பாவம் என்ற சொல் நிறையவே புழங்கும். பொதுப்படையாக இச் சொல்லுக்கு 'உணர்வு' அல்லது 'உணர்ச்சி' என்று பொருள் கூறலாம். பாவம் ததும்பப் பாடினார் என்று பாராட்டுவதுண்டு.

ஆனால் பாவம் என்று குறிப்பிடுகிற உணர்ச்சி, சராசரியான மனித உணர்ச்சியைப் போன்றது அன்று. சொல்லும் பொருளும் இசையும் குரலும் இணைந்து உயர்தேடலில் கரைந்து இழையும்போது வெளிப்படும் உயர்நிலையே பாவம். (குரலிசையல்லாத வாத்திய இசையிலும்கூட நாம் இந்த ஆன்மத் தேடலைக் கேட்டுணர முடியும். வேற்றுமொழிப் பாடல், மெல்லிசை, கிராமிய இசை என அனைத்திலும் இந்த உயர்தேடல் சாத்தியமே.)

இத்தகைய உயர்நிலையில் மட்டுமே கேட்போர் கண்களில் நீர் பெருகும், இந்த இசை மட்டுமே உள்ளங்களைப் பரவசத்தில் நிறைக்கிறது; அல்லது அமைதியில் ஆழ்த்துகிறது.

இவ்வாறிருக்க, இன்றைய கச்சேரி மேடைகளில் பல முன்னணி கலைஞர்கள் காகிதத்தில் பாடல்களை எழுதி வைத்துக்கொண்டு, அதைப் பார்த்துப் பாடுகிற பழக்கத்தைக் கடைபிடிக்கிறார்கள். கவலைக்குரிய பரிமாணத்தில் இப்போக்கு வளர்ந்து வருகிறது.

சிலர், காகிதங்களை எலக்ட்ரானிக் சுருதிப்பெட்டிக்குப் பின்னால் ஒளித்து வைத்துக்கொண்டு அவ்வப்போது கள்ளத்தனமாக நோட்டம் விட்டபடி அவஸ்தைப் படுகிறார்கள். வேறு பலர் பட்டவர்த்தனமாகப் பையைப் பிரித்து, நோட்டுப்புத்தகங்களைப் பரப்பி வைத்துக் கொண்டிருக்கிறார்கள்; அல்லது இடக் கையில் தூக்கிப் பிடித்துக்கொண்டு பார்த்தபடி பாடுகிறார்கள்!

'பேப்பரைப் பார்த்துப் பாடினால் என்ன தப்பு?' என்கிற மனோபாவத்தையே இப்போக்கு வெளிப்படுத்துகிறது.

ஆனால், தாளில் கண் செலுத்தித் துழாவிப் பாடும்போது பாவம் என்ற ஜீவநாடி சிதைந்துதான் போகிறது.

மகான்கள் தாங்கள் இயற்றிய பாடல்களின் வரி வடிவத்தைக் கற்பிக்கவில்லை; ஒலி வடிவத்தையே பரிமாறினார்கள். வழங்க வழங்கவும், வாங்க வாங்கவும் அந்த வடிவங்களின் மெருகும் பொலிவும் காத்திரமும் கூடின. வரி வடிவம் என்பது ஆவணப்படுத்த மட்டுமே பயன்பட்டது. ஒலிவடிவம்தான் உணர்வைப் புகட்டியது; உயர்தேடல் நோக்கித் திருப்பிவிட்டது. இன்றைக்கும் பல நல்லாசிரியர்கள் இந்தக் கற்பித்தல் முறையையே கடைப்பிடிக்கிறார்கள்.

இவ்வாறிருக்க, வரி வடிவத்தை






மியூசிக் 

எதிரில் வைத்துக்கொண்டு கச்சேரி செய்வது என்பது புழங்காத வீட்டை அலங்கரிக்கும் முயற்சிதான்! வார்த்தைகளே தன்வயமாகாதபோது உணர்ச்சிகள் எவ்வாறு ஊற்றெடுக்கும்? மனம் இலயிக்காதபோது, சாஹித்யகர்த்தாவின் நுண்ணிய உணர்வுகளை எவ்வாறு கிரஹித்து உணர்ந்து வெளிப்படுத்த முடியும்?

தாள்களை வைத்துக்கொண்டு பாடினாலும் ரசிகர்கள் விரும்பித்தானே கேட்கிறார்கள் என்று வாதாடலாம். ரசிகன் சட்டம் பேச மாட்டான்; ஆனால் இசையில் உயிரோட்டத்தை ஆவலோடு எதிர்பார்ப்பான். ஏமாற்றங்களை நீண்ட

## இது...?

காலம் தாங்க மாட்டான்.

இது ஒரு புறமிருக்க, இன்றைய இசைக் கலைஞர்களும் சரி, ரசிகர்களும் சரி, மகான்களான வாக்கேயக்காரர்களுக்குக் கடன்பட்டவர்கள். இவர்கள் பாதை போட்டிராவிட்டால் இன்றைய இசை உலகே இல்லை. நன்றிக் கடனுக்காகவாவது அவர்கள் இயற்றிய சாஹித்யங்களைப் பாடம் செய்து தன்வயப்படுத்திக் கொண்டு பாட வேண்டாமா?

- ரஸிகா


# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் சேர்க்கைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

"ஒரு மொட்டு வெடித்து மலரக் காத்திருக்கிறது"

- 'கட்சியிலும் ஆட்சியிலும் தமக்கென்று தயார் செய் யப்பட்ட குறிப்பிட்ட இடத் தில் அமர ஸ்டாலின் தகுதி யானவர் ஆகிவிட்டாரா?' என்ற நம் கேள்விக்கு மூத்த காங்கிரஸ் பிரமுகரும், சட்டமன்ற உறுப்பினருமான பீட்டர் அல்போன்ஸ் அளித்த பதில்தான் இது.

எமர்ஜென்ஸி காலத்தில் சிறைக்குச் சென்றதி லிருந்து இன்றுவரை ஸ்டாலின் நடந்து வந்த பாதை யில் முட்களைவிட ரோஜாப் பூக்களே அதிகம்! இந்தச் சிவப்புக் கம்பள வரவேற்புக்குக் காரணம் தந்தை கலைஞர் என்றால், இடைபட்ட சில முட் களுக்குக் காரணமும் கலைஞரே!

கலைஞர் என்ற சூரியனின் பக்கத்தில் எத்தனை வாட்ஸ் மின்சார பல்பை வைத்தாலும் எடுபடாது என்பதுபோல, அவரது அருகிலேயே வளர்ந்ததுகூட ஒருவிதத்தில் சாதகமற்ற நிலைதான். ரொம்பவும் வெளிப்படையாக ஸ்டாலினை பிரமோட் செய்தால் மற்ற சீனியர்கள் என்ன சொல்வார்களோ என்ற கலைஞரின் தயக்கம் காரணமாகக்கூட, அவரின் வளர்ச்சி கொஞ்சம் தடைபட்டிருக்கக்கூடும். அதே நேரத்தில் தலைவருடைய மகன் என்பதால் தடாலடி



# ஸ்டாலின்

யான உத்தரவோ, வெளிப்படையான விருப்பு வெறுப்போ காண்பிக்கக் கூடாது என்பதில் ஸ்டாலின் மிக எச்சரிக்கையாக இருக்கிறார். அத னால் அவர் காட்டும் பொறுமையும் அடக்கமும் அவரைச் செயலற்றவர் என்ற நிலைக்குச் சில சமயங் களில் தள்ளி விடுகின்றன. நெருக்கமான நண்பர்களை வைத்துக்கொள்ள முடிவதில்லை. அந்த நண்பர்கள் தம் பெயரை தவறாகப் பயன்படுத்தக்கூடும் என்ற பயம்தான். காரணம், கடந்த இருபத்தைந்து வருட காலத்தில் ஸ்டாலினுடன் நெருக்கமாக இருந்து கழற்றி விடப்பட்ட நண்பர்கள் அரை டஜனுக்கு மேலே இருக்கும். தமது புத்திசாலித்தனத்தையோ, போர்க் குணத்தையோ பளிச்சென பாமர மக்கள் புரிந்துகொள்ளுமளவுக்கு ஸ்டாலின் நடந்து கொள்ள வில்லை என்ற பேச்சும் இருக்கிறது.

"ஆனால் அவரை வாரிசு அரசியல் என்று குற்றம் சாட்டுவதை ஏற்றுக்கொள்ள முடியாது" என்கிறார் பா.ஜ.க.வின் அகில இந்தியத் துணைத் தலைவர் இல.கணேசன்.

"முதல் நாள்வரை விமானம் ஓட்டிய ராஜீவ் காந்தி யைப் பிரதமர் பதவியில் அமர வைத்ததும், ராஜீவின் மனைவி என்பதாலேயே சோனியாவுக்கு அந்தப்

பதவியைத் தாரை வார்க்க காங்கிரஸ் முயன்றதும்தாம் வாரிசு அரசியலே தவிர, முப்பதாண்டு காலமாக அரசியலில் ஈடுபட்டிருக்கும் ஸ்டாலினை வாரிசு அரசியலோடு ஒப்பிட்டுப் பேச முடியாது. ஆனால், கட்சியின் எதிர்காலத் தலைமை இவர் கையில் விழ வேண்டும் என்ற அளவுக்கு அவரது நிலையும், கட்சியின் அமைப்பும் பிரத்யேகமாக உருவாக்கப்பட்டிருக்கின்றன" என்கிறார் இல.கணேசன்.

இந்த விமர்சனம் ஸ்டாலினுக்கு மிகவும் பொருத்தமானதுதான். கட்சி விதிகள் இடம் கொடுக்காத நிலையிலும், கடந்த முப்பது வருடங்களாக இளைஞரணிச் செயலாளராகத் தொடர்கிறார் ஸ்டாலின். தகுதியுள்ள இளைஞரை அந்த இடத்தில் வைக்குமளவுக்கு ஸ்டாலினுக்குத் தன்னம்பிக்கையும், தைரியமும் இல்லை. இந்தப் பதவியுடன் இப்போது துணைப் பொதுச் செயலாளர் பதவியும் உடனிருக்க, இயல்பாகவே கட்சி அமைப்பில் உச்சிப் படிக்கு முந்தைய படியில் நின்று கொண்டிருக்கிறார். இந்தப் படியில் இவரோடு நிற்கும் ஓரிரு சீனியர்கள்கூட விட்டுக் கொடுக்கும் மனநிலையில் தான் இருக்கிறார்கள்.

"இளைஞரணி என்ற கட்டுக்கோப்பான அமைப்பை உருவாக்கி, அதற்கு இருபது லட்சம் துடிப்புள்ள இளைஞர்களைச் சேர்த்த பெருமை ஸ்டாலினுக்கு மட்டுமே உண்டு. அந்த அணியில் உள்ள ஒவ்வோர் இளைஞனும், ஸ்டாலினை ஓர் உந்து சக்தியாக நினைக்கிறார்கள். எனவே அவர் அதில் தொடர்கிறார். ஜனநாயக ரீதியில் செயல்படும் எங்கள் அமைப்பில் தனிப்பட்ட விருப்பு, வெறுப்புக்கு இடமில்லை" என்கிறார், தி.மு.க.வின் அமைப்புச் செயலாளரான டி.கே.எஸ்.இளங்கோவன்.

"இளைஞரணி என்ற அமைப்பில் ஸ்டாலின் திணிக்கப்பட்டதும் தி.மு.க.விலிருந்த எனக்கு நன்றாகத் தெரியும். 'இளைஞரணி அமைக்க வேண்டும்' என்று கலைஞர் என்னிடம் சொன்னார். நான் 'மற்ற கட்சிகளில் இருக்

# ரெடி?





• வேல்முருகன்

கும் இளைஞர் அமைப்புகளைக் கணித்துச் செயல்படலாம்' என்றேன். இதற்குள் திருச்சியில் கூட்டம் போட்டு பரிதி இளம்வழுதியை விட்டு ஸ்டாலினை முன்மொழிந்து செயலாளர் ஆக்கிவிட்டார்கள்'' என்று சொல்கிறார் முன்பு தி.மு.க.விலிருந்து இப்போது அ.தி.மு.க.வில் ஐக்கியமாகியிருக்கும் க.சுப்பு.

அப்படி நியமிக்கப்பட்ட பிறகு அந்தப் பொறுப்புக்குத் தம்மைத் தயார்படுத்திக்கொண்டு கட்சிப் பணியில் ஸ்டாலின் கடுமையாக உழைத்தார். அதனால்தான் மாவட்ட அளவில் அவருடன் பணி செய்த பெரும்பாலோர் இன்று முக்கிய பொறுப்பில் அமர்ந்திருக்கிறார்கள். அந்த வகையில் அமைப்பு இவர் பக்கம் இருப்பதால், கட்சிக் கனி பழுத்து இவர் மடியில் விழுவதை யாரும் தடுக்க முடியாது என்பதே இன்றைய நிலை. குறிப்பாக, கடந்த சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு வைகோவும் தி.மு.க.வுக்குக் கடுமையான எதிரியாகிவிட்ட நிலையில் ஸ்டாலினுக்குப் பாதை தெளிவாகவே இருக்கிறது.

கட்சியில் ஸ்டாலினின் ஏற்றம் தவிர்க்க முடியாத ஒன்றென்றால், அரசு நிர்வாக ரீதியிலும் அவரை முன்னுக்குக் கொண்டுவரும் முயற்சிகள் தொடர்கின்றன. இந்த முறை பதவிக்கு வந்தவுடன் கலைஞர் ஸ்டாலினுக்கு எந்த இலாகாவைக் கொடுப்பார் என்று பலர், பல ஊகங்களைச் சொல்லியிருந்த நிலையில், நகராட்சி நிர்வாகம், கிராம வளர்ச்சி, குடிநீர் வசதி என்று கனமான இலாகாக்களைக் கொடுத்து உள்ளாட்சி அமைச்சராக்கி விட்டார் கலைஞர். இப்போது சுயநிதிக் குழுக்களும் ஸ்டாலினுடைய கட்டுப்பாட்டில். அரசின் செயல்பாடுகளில் 75 சதவிகிதம் இவர் கையில் என்ற நிலையில், உள்ளாட்சித் துறை அமைச்சர் ஸ்டாலின்தான் உண்மையாக தமிழகத்தை ஆண்டு வருகிறார். வருத்தப்படும், கோபப்படும் சீனியர்கள், அவற்றை வெளிப்படுத்த தக்க நேரத்துக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். மற்ற இலாகாக்கள் விவகாரத்தில் சகட்டுமேனிக்குத் தலையிடும் முதல்வரின் உதவியாளர்கள்கூட இவர் விஷயத்தில் கப்சிப். இவரால் தேர்வு செய்யப்பட்டவர்கள்தாம் இவரது இலாகா அதிகாரிகள். ஸ்டாலினுக்கு அந்தளவு சுதந்திரம் அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

''ஒரு தலைவருக்குரிய பண்பு ஸ்டாலினிடம் இருப்பதைப் பார்க்கிறேன். மாவட்ட ஆலோசனைக் கூட்டங்களில் அதிகாரிகள் பேசுவதை உன்னிப்பாகக் கேட்கிறார். பின்னர் அவற்றுக்குத் தெளிவாகப் பதில் சொல்கிறார்'' என்று அவருக்கு சர்ட்டிபிகேட் கொடுக்கிறார் பீட்டர் அல்போன்ஸ். மேயராக இருந்த ஐந்து வருட அனுபவம், நிர்வாகத்தைப் பற்றிய முழு விவரங்களை அவருக்குக் கற்றுக் கொடுத்திருக்கக்கூடும்.

''நகரத்தில் பிறந்து வளர்ந்த ஸ்டாலினுக்கு மக்களுடைய கஷ்டங்கள் தெரியாது. அவர் இப்போது இருக்கின்ற நிலை கலைஞரால் செயற்கையாக உருவாக்கப்பட்டதுதான். எனவே இந்த நிலை ஆட்டம் காணக்கூடும். இவரைவிட தயாநிதி பளிச்சிடுகிறார்...'' என்றும் சொல்கிறார் க.சுப்பு.

இப்போதெல்லாம் இரவு நீண்ட நேரம் கோட்டையில் ஸ்டாலின் அறையில் விளக்கெரிவதைப் பார்க்க முடிகிறது. ''கடுமையான உழைப்பு... மாற்றுக் கட்சியினரை மதிக்கும் பண்பு... பெரிய இலாகாக்களின் சுமை தோளில் ஏற்றப்பட்டிருப்பதால் தொய்வின்றிப் பணியாற்றுகிறார் ஸ்டாலின். மற்றபடி அவரது ஏற்றம் என்பது அவரது கட்சியைச் சார்ந்தது'' என்கிறார் பா.ம.க. சட்டமன்ற

• கே.எஸ்.ராதாகிருஷ்ணன்

* சு.சுப்பு



உறுப்பினர் வேல்முருகன்.

ஆனால் எல்லோரும் பொதுப்படையாக விமர்சிப்பது ஸ்டாலினின் சட்டசபைச் செயல்பாட்டைத்தான். "எதற்கும் வாய் திறப்பது கிடையாது; கொட்டாவி விடுவதற்குத் தவிர" என்று கொஞ்சம் கிண்டலாகவே சொல்கிறார் தோழமைக் கட்சி சட்டமன்ற உறுப்பினர் ஒருவர். போன சட்டமன்றத் தொடரில் செங்கோட்டையன், பரிதியை ஏதோ விமர்சனம் செய்தபோது மட்டும் குறுக்கே புகுந்து அதைச் சபை நடவடிக்கையிலிருந்து எடுக்கச் சொன்னார் ஸ்டாலின். "அவரது இலாகாவின் மான்ய கோரிக்கை, கேள்வி-பதில்கள் யாவற்றையும் சிறப்பாகவே செய்கிறார் ஸ்டாலின். மற்றபடி அ.தி.மு.க. வம்பு வளர்க்கும்போது எச்சரிக்கையாகத்தானே இருக்க வேண்டும்" என்கிறார் டி.கே.எஸ்.இளங்கோவன். 1989-ல் ஜெ. சட்டமன்ற அமர்க்களத்தின் போதுகூட மௌனம் காத்தவர்தான் ஸ்டாலின்.

'இவரைத் தளபதி என்கிறார்கள்; எந்த படைக்குத் தலைமை வகித்தார்?' என்று சபையில் ஜெ. இவரைக் கிண்டல் செய்திருக்கிறார்.

"அவரது வரலாற்றில் போர்க்குணம் என்பது மிகவும் குறைவுதான்! தொண்டர்களின் அரவணைப்பும், ஓய்வறியா உழைப்பும், யுக்தியும் ஒரு தலைவனுக்குத் தேவையானவை. தலைவன் என்றால் களத்தில் நிற்க வேண்டும்; கட்சியும், மக்களும் அதை ஏற்க வேண்டும்" என்கிறார் ம.தி.மு.க.வின் முக்கிய பிரமுகரான கே.எஸ்.ராதாகிருஷ்ணன். குறிப்பாக ஜெ. ஆட்சியில் தி.மு.க. பேரணியில் வன்முறை ஏவப்பட்ட போதும், சைதை இடைத் தேர்தலின் போதும் ஸ்டாலின் முன்னணிக்கு வந்து போராடவில்லை என்பது பொதுவாகச் சொல்லப்படும் விமர்சனம். கலைஞர் கைது செய்யப்பட்டபோதும் இன்னும் கொஞ்சம் தைரியத்தைக் காட்டி அவர் விவேகமாகச் செயல்பட்டிருக்கலாம் என்கிறார்கள்.

'மகனைத் தூக்கிப் பிடிக்கிறார்' என்ற விமர்சனம் காரணமாக 1989 மற்றும் 1996-ல் ஸ்டாலினை அமைச்சராக்காமல் விட்டுவிட்டார் கலைஞர். அப்போதே அவரை ஆக்கியிருந்தால் இப்போது 'மரியாதை' வரிசையில் நான்காவதாக கொண்டு வந்திருக்கும் நிலையில் முணுமுணுப்பு இருந்திருக்காது. "ஸ்டாலினுக்கு வாய்ப்பு உருவாக்கப்பட்டிருக்கிறது. ஆனால் மக்கள் எந்த அளவுக்கு ஏற்பார்கள் என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்" என்று சொல்கிறார் இல.கணேசன்.

ஸ்டாலினுக்குப் பலமான சவால்கள் காத்திருக்கின்றன என்பது மட்டும் நிஜம். சாதுவாக இருக்கும் தோழமைக் கட்சிகள் பின்னாட்களில் பிரச்னைகள் செய்யும்போது அதைச் சமாளிக்கும் திறன் வேண்டும். தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்களில் பெரும்பாலோர் இவரது செலக்ஷன் என்பதால் கவலையில்லை. இருப்பினும், வெளியிலிருந்து வரும் எதிர்ப்பைவிட இவரது உள்வட்டத்திலிருந்து வரும் எதிர்ப்பையும் அதிருப்தியையும் சமாளிக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறார் ஸ்டாலின்.

* ப்ரியன்

அட்டை மற்றும் படங்கள் : ஸ்ரீஹரி



* பீட்டர் அல்போன்ஸ்

# சந்தாதாரர் ஸ்பெஷல்

அறுபத்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலாக ஒவ்வொரு தீபாவளியன்றும் கல்கி வாசகர்களின் இல்லங்களில் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கி வருகிறது **கல்கி தீபாவளி மலர்.**

காரணம், ஓராண்டு சந்தா ரூ.440/- செலுத்தினால் ரூ. 100/- பெறுமானமுள்ள **கல்கி தீபாவளி மலர்** பரிசாக உங்கள் வீடு தேடி வரும்!

**கல்கி தீபாவளி மலர்** குறைந்த எண்ணிக்கையிலேயே சந்தாதாரருக்கு ஒதுக்கப்படுவதால், ஏமாற்றத்தைத் தவிர்க்க உடனடியாகச் செயல்படவும்.

ஏற்கெனவே எமது நேரடி சந்தாதாரராக இருப்போரும் ஓராண்டு சந்தா அனுப்பி தங்கள் சந்தாவை மேலும் ஓராண்டு நீட்டிக்கச் செய்து, பரிசைப் பெறலாம். சந்தா எண்ணைத் தவறாமல் குறிப்பிடவும்.

முழு விலாசத்தையும் தொலைபேசி எண்ணுடன் தெளிவாக எழுதவும்.

**முடிவு தேதி அக்டோபர் 10, 2006.**

முடிவு தேதியை ஒத்திப்போட இயலாது.

'கல்கி' என்ற பெயருக்கு சந்தாத் தொகையை DD, MO அல்லது Cheque மூலம் அனுப்பலாம். வெளியூர் Cheque அனுப்புவோர் ரூ.30/- கூடுதலாக அனுப்பவும்.

***கல்கி சந்தாத் தொகை அனுப்ப வேண்டிய முகவரி :***

சர்க்குலேஷன் மேனேஜர்,
கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032
போன் : 2225 1522, 2225 0623



✉ 'உடம்புல தெம்பு இருக்கிற வரைக்கும் உழைக்கணும்!' - கலக்கிட்டீங்க ரெங்கசாமி.

- வ. இராமுவேல், திருச்சி - 17

✉ அ.தி.மு.க என்றாலே காங்கிரஸுக்கு அலர்ஜியாகி விட்டதை சுதர்ஸனம் பேட்டி பொட்டில் அடித்தாற் போல் சொல்லி விட்டதே!

- சாமி.. திருவண்ணாமலை

சிந்தனையே அவர்களைச் செயலாற்ற விடாமல் தடுக்கிறது.

- ஆர். பிரகாஷ், பொன்மலை

✉ கோலங்கள் திருச்செல்வம் 'சீரியல்னா இளக்காரமா பார்க்கிறாங்க' என்கிறார்... நல்ல நாட்களில் துக்கிரித்தனமான காட்சிகள், இழுவை கதை அமைப்பு... எப்படி மதிக்க முடியும் சீரியலை? அரசு, சீரியலுக்குத் தடை போட்டால் நல்லது.

- ஜவகர், சென்னை - 91

# ரசிக்க வைத்த நையாண்டி!

✉ 'நேர்த்திக் கடன்' சிறுகதை நேர்த்தியாக இருந்தது. வள்ளியின் தாயுள்ளத்தை அழகாகச் சித்தரித்துக் காட்டியிருந்தார் செ. செண்பகக்கண்ணு.

- ஜெ. துரைராஜ், சென்னை - 116

✉ கௌதமின் பேட்டி 'வேட்டையாடு விளையாடு' ரிலீஸான கையோடு சுடச்சுட இருந்தது!

- பாலா, சென்னை - 78

✉ 'தி.மு.க ஆட்சி, சின்ன காமராஜர் ஆட்சியா?' என்ற வாசகரின் கேள்விக்குத் தராசுவின் பதில் ரசிக்க வைத்த நையாண்டி!

- ஆர். ராமசுப்ரமணி, திருவாரூர்

✉ தலையங்கத்தில் நீங்கள் கூறியுள்ளவை எல்லாம் தலைவர்களுக்குச் சாத்தியமே! ஆனால் தங்களுடைய 'அரசியலுக்கு' அதனால் என்ன இலாபம் என்ற

✉ ஷெனாய் மேதை பிஸ்மில்லா கானின் ஆசையை அரசு நிறைவேற்றியிருந்தால், அவருக்குச் செய்யும் கைமாறாக இருந்திருக்கும்.

- கோமளா ரங்கநாதன், சென்னை - 17

✉ சும்மா வாய்கிழிய இலங்கையில் அமைதி வேண்டும் எனப் பேசியும், கூக்குரலிட்டும் அறிக்கைகள் வெளியிடும் அரசியல் தலைவர்களுக்கு உருப்படியான ஆலோசனை கூறிய தலையங்கம் கவனிக்கத்தக்கது.

- ரேவதிப்ரியன், ஈரோடு - 1

# மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டும் கதைகள்

## அநுத்தமா

1. ஒரே ஒரு வார்த்தை 90.00
2. கேட்டவரம் 70.00
3. லக்ஷ்மி 90.00
4. சேவைக்கு ஒரு சகோதரி 100.00
5. ருசியான கதைகள் 95.00
6. அற்புதமான கதைகள் 95.00
7. பிரமாதமான கதைகள் 95.00
8. படுபேஷான கதைகள் 95.00
9. அழகான கதைகள் 95.00
10. நைந்த உள்ளம் 135.00

## ரா.கி. ரங்கராஜன்

1. தர்மங்கள் சிரிக்கின்றன 45.00
2. ஜெமா! ஜெமா! ஜெமா! 60.00
3. அழைப்பிதழ் 65.00
4. ராசி 65.00
5. க்ரைம் 55.00
6. புரட்சித்துறவி 35.00
7. கையில்லாத பொம்மை 60.00
8. உள்ளேன் அம்மா 40.00
9. அபாய நோயாளி 60.00
10. ஒளிவதற்கு இடமில்லை (I&II) 140.00
11. ஹவுஸ்ஃபுல் 72.00
12. ஒரு தற்கொலை நடக்கப் போகிறது? 40.00

## சியாமளா ராவ்

1. தியாகி தோழி தலைவி 60.00
2. தேடியுனை சரணடைந்தேன் 52.00
3. உறவு தவறு 30.00
4. ஒரு கூண்டுக் கிளிகள் 65.00
5. அக்கினிக் குஞ்சுகள் 62.00
6. வேஷப் பறவை 70.00
7. ஜீவநதிகள் 40.00
8. மாறிய கோணங்கள் 77.00
9. பாயும் ஒளி நீ எனக்கு 50.00

## எண்டமூரி வீரேந்திரநாத்

1. அந்தர் முகம் 62.00
2. தளபதி 50.00
3. 13–14–15 80.00
4. நிகிதா 80.00
5. ரிஷி 30.00
6. பந்தம் பவித்ரம் 70.00
7. பதியன் ரோஜா 50.00
8. காதலெனும் தீவினிலே 42.00
9. காஸனோவா–99 75.00
10. தி பெஸ்ட் ஆப் எண்டமூரி 60.00
11. துளசிதளம் 85.00
12. மீண்டும் துளசி 100.00
13. பிரளயம் 35.00
14. பட்டிக்காட்டு கிருஷ்ணன் 50.00
15. சாகர சங்கமம் 56.00
16. காதல் 'செக்' 66.00
17. லேடீஸ் ஹாஸ்டல் 56.00
18. பிரியமானவளே... 95.00

தமிழில் கௌரி கிருபானந்தன்

## காமேஸ்வரி எழுதி – கௌரி கிருபானந்தன் தமிழாக்கம்

1. துணையைத் தேடி 75.00
2. வாழ்க்கையை நழுவவிடாதே 55.00

## சி. ராதாகிருஷ்ணன் எழுதி 'சிவன்' மொழிபெயர்த்த

1. நிழலின் வடுகள் 50.00
2. வாணியன்குளம் சுயம்வரம் 50.00

## வ.வே.சு. ஐயர் எழுதிய

மங்கையர்க்கரசியின் காதல் 37.00

கலைமாமணி எம்.எஸ். உமர் எழுதிய

**கலை உலக சக்கரவர்த்திகள்**

ரூ. 200.00

தமிழில் வெளிவந்த முதல் சிறுகதைத் தொகுப்பு ராஜாஜி, சாவர்க்கரின் முன்னுரையுடன் மகரிஷி வ.வே.சு. ஐயர் எழுதிய

**மங்கையர்க்கரசியின் காதல்** ரூ.37/–

## ஜாவர் சீதாராமன்

1. உடல் பொருள் ஆனந்தி 85.00
2. மின்னல் மழை மோகினி 110.00
3. நானேநான் 55.00

## யத்தனபூடி சுலோசனா ராணி

1. தொடுவானம் (I & II) 120.00
2. நிவேதிதா 35.00
3. சம்யுக்தா 43.00
4. சிநேகிதியே 55.00
5. செக்ரட்டரி 87.50
6. கண்டு கொண்டேன் கண்டு கொண்டேன் 67.50
7. இதயகீதம் 60.00

## லட்சுமி ராஜரத்தினம்

1. கனவு ஊர்வலங்கள் 60.00
2. அன்புள்ள அம்மாவுக்கு 70.00
3. பல்லவப் பாவை 70.00
4. நர்ஸ் மாதவி 20.00

## மோகன சந்திரன் தமிழில் சிவன்

**கலிகா** (பாகம் 1, 2) 120.00

## சரத்சந்தர் எழுதிய

**தேவதாஸ்** 55.00

## பி.வி. தம்பி எழுதி 'சிவன்' மொழி பெயர்த்த

**கிருஷ்ணப் பருந்து**

(பாகம் 1, 2) 120.00

## சுதாங்கன் எழுதிய

1. தேதியில்லாத டைரி 36.00
2. சாய்ந்துகொள்ள தோள் வேண்டும் 35.00

## பங்கிம் சந்திர சட்டர்ஜி எழுதிய

1. ஆனந்தமடம் 50.00
2. விஷவிருட்சம் 30.00



அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

64, (பழைய எண் : 244) ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால் பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை – 600 004. தொலைபேசி: 2464 1314
e-mail : srinivasan@alliancebook.com
visit us at : www.alliancebook.com

# "ஹீரோயிசம் மாறணும்!"

'அழகிய தீயே'வில் அசர வைத்து, சிதம்பரத்தில் ஓர் அப்பாசாமி'யில் இரண்டு குழந்தைகளின் தாயாக வாழ்ந்து, இப்போது 'மாயை, மாயை எல்லாமே மாயை' என்று தத்துவ மழை பொழிந்து கொண்டிருக்கிறார் நவ்யா நாயர். தத்துவத்துக்குக் காரணம் கேட்டபோது,

''எப்பவும் கிராமத்துக் கதைகளை எடுத்துக்கொண்டிருந்த சேரன் சார், இப்போ சிட்டி சப்ஜெக்ட் பண்றாரு. 'மாயக் கண்ணாடி'. அதில் நான் பியூட்டீஷியனா நடிக்கிறேன். இதில் ஓவர் பந்தா பண்ற பொண்ணு நான். மார்க்கெட்ல வர்ற செல்போன், புடவை, நகைங்க எல்லாமே தங்கிட்ட இருக்கணும்னு நெனைக்கற கேரக்டர் எனக்கு. எல்லாருமே என்னைப் பெருமையா பார்க்கணும்னு நினைப்பேன். படம் செவன்ட்டி



பர்சன்ட் முடிஞ்சிருச்சு. நாம பாக்குற, ஆசைப்படுற எல்லாமே மாயைன்னு சொல்ற படம்'' என்று சிலாகித்தவரை மறித்து 'என்னாச்சு... சேரன் கூட நீங்க நடிச்ச ஆடும் கூத்து?' என்றோம்.

''ஒண்ணும் ஆகல. கொஞ்சம் பாட்டெல்

லாம் ஷூட் பண்ண வேண்டியிருக்கு, அவ்வளோதான். இது அவார்டு படம் இல்லீங்க, பக்கா கமர்ஷியல். சீக்கிரம் தியேட்டர்ல பார்ப்பீங்க" என்று நம்பிக்கையாகச் சொன்னவரிடம்,

'தொடர்ந்து ரெண்டு படம் சேரன் கூட பண்ணிட்டீங்க... பார்ட்டி எப்படி?' என்று முடிக்கும் முன்,

"பெஸ்ட் டைரக்டர் மட்டுமில்ல, நல்ல மனிதரும்கூட. ஷூட்டிங் ஸ்பாட்ல ரொம்ப ஸ்ட்ரிக்டா இருப்பாரு. செல்போன் யூஸ் பண்ண யாருக்கும் அனுமதி இல்ல. படம் நல்லா வரணும்ங்கறதுக்காக எந்த அளவுக்கும் போய் ரிஸ்க் எடுப்பாரு. அந்த மாதிரி சமயங்கள்ல அவர் ஒரு டெரர். சின்ன மிஸ்டேக் பண்ணினாகூட பயங்கரமா ரியாக்ட் பண்ணுவாரு. ஆனா இது வரைக்கும் நான் திட்டு வாங்கினது இல்லப்பா..." என்று படபடவென்று பேசியவரை டென்ஷனாக்க,

'தமிழ் சினிமாவுல ஹீரோயிசம் ரொம்ப அதிகமா இருக்கே, இதை எதிர்த்து உங்களை மாதிரி நல்ல நடிகைகள் ஏன் போராடக் கூடாது?' என்றோம்.

"இது இப்பத்தான் நடக்குதா? காலங்காலமா நடந்துக்கிட்டிருக்கிற விஷயம் தானே... இது மாறணும். அதற்கான நல்ல கரு, சூழல், கதாபாத்திரம்னு எல்லாமே மாறணும். ஆனா எனக்குக் கிடைச்ச படங்களெல்லாம் என்னை முன்னிலைப்படுத்தியப் படங்கள்தான்" என்றவரை பொறாமைப் படவைக்க முயற்சி செய்தோம்.

'த்ரிஷாவுக்கு ரசிகை மன்றம் ஆரம்பிச்சிருக்காங்களே... உங்களுக்கு?'

"அவங்க தமிழ், தெலுங்குன்னு நிறைய படங்கள் பண்ணி எல்லார்கிட்டயும் நல்ல பேரும் புகழும் சம்பாதிச்சுட்டாங்க. அவங்களுக்கு ரசிகை மன்றம் வச்சது வரவேற்கக்கூடியது. இதேமாதிரி நிறைய ஹீரோயின்களுக்கு மன்றங்கள் வந்தால் மக்களும் தியேட்டருக்கு வருவாங்க. ஹீரோயிசம் கொஞ்சம் கொஞ்சமா மறையும்"

'உங்க அடுத்த படங்கள் என்ன?'

"மலையாளத்துல 'கலபம்' பண்றேன். கலபம்னா 'சுத்த சந்தனம்'னு அர்த்தம். இது குருவாயூர்ல ரொம்ப ஃபேமஸ். அடுத்து 'பதாகா'ன்னு ஒரு படம். 'கொடி'ன்னு அர்த்தம். அதுக்கப்புறம் தான் தமிழுக்கு வருவேன்" என்றவர், 'ஷாட் ரெடி' என்று இயக்குநரின் குரல் கேட்டதும், இறக்கை இல்லாத குறையாகப் பறந்துவிட்டார்.

## "த்ரிஷாவின் ரசிகை மன்றங்கள் தொடங்கப்பட்டிருப்பது வரவேற்கக்கூடியதே!"

- ம.மனோ

படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**





# கல்கி



2006 செப்டெம்பர் 17
விய புரட்டாசி 1
மலர் : 65
இதழ் : 7

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## அப்துல் கலாம் காட்டும் ஆக்கப் பாதை

சென்ற வாரம் தமிழகம் வந்த குடியரசுத் தலைவர் அப்துல் கலாம், ஐந்தாறு பொதுக் கூட்டங்களில் உரையாற்றினார். இவர் ஆற்றிய அனைத்துச் சொற்பொழிவுகளின் முக்கிய அம்சங்களையும் இணைத்துப் பார்க்கிறபோது நமது தேசத்துக்கான ஒரு சீரிய இலக்கும் அதை அடைவதற்கான படிப்படியான வழிமுறைகளும் அழகாக வெளிப்படுகின்றன.

ஆம்பூரில் இஸ்லாமிய கல்விக் கழக விழாவில், பெண் கல்வியின் முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டியவர், அப்பகுதியில் ஐம்பது சதவிகிதத்தினருக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பதால், அடுத்த ஐந்தாண்டுகளில் எழுத்தறிவித்தலை வேள்வியாக்கி ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் ஐந்து பேருக்கு எழுதப் படிக்கக் கற்றுத்தர வேண்டும் என்று இலக்கு நிர்ணயித்தார்.

சென்னைப் பல்கலைக்கழக விழாவிலோ, உயர்கல்விக்கான புதிய பாதையைச் சுட்டிக் காட்டினார் கலாம். பல்கலைக்கழகங்களுக்குப் போதுமான அளவு நிர்வாகச் சுதந்திரம் தரப்பட்டால், அவை முதல் தரமான மனித வளத்தை உருவாக்கி, நாட்டின் அறிவுப் பெருக்கத்துக்கு வழிகோலும் என்று வளர்ச்சியின் ஆரம்பப் புள்ளியை அடையாளப்படுத்திப் பேசினார். பேரறிவு யுகத்தில் நாம் இருப்பதையும் அந்த அறிவுதான் ஏழைமையை ஒழித்து வளர்ச்சிப் பாதையில் நாம் முன்னேற உதவும் என்பதையும் எடுத்துச் சொன்னார். 'விவசாயம், உணவுப் பதனிடுதல், சுகாதாரம், மின் உற்பத்தி, போக்குவரத்து மேம்பாடு, தகவல் - தொலைத்தொடர்பு ஆகிய பிரிவுகளை ஒருங்கிணைத்து ஒரே திசை நோக்கி இவற்றின் ஆக்க சக்தியைக் குவிக்க வேண்டும். அந்தச் சக்தியின் விசையால் நாடு முன்னேறினால் ஏழைமை படிப்படியாக ஒழிந்துவிடும். எனவே, கல்வித் திட்டமும் சரி, கல்வியாளர்களும் சரி, இந்தப் பெரு நோக்கையே அடிப்படையாகக் கொள்ள வேண்டும்' என்று






கல்விக்கு ஒரு புதிய திசை காட்டினார்.

தொல்காப்பியர் விருதை கலைஞருக்கு வழங்கிய விழாவில், தமிழ்மொழி, கலாசாரத்தின் மகத்துவத்தைப் பேசியதோடு நின்றுவிடாமல், ஆராய்ச்சியின் முக்கியத்துவத்தையும் சொன்னார் அப்துல் கலாம். தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்தை உறுதி செய்தால் ஒரு மிகப் பழம்பெரும் கலாசாரம் பற்றிய தெளிவு பிறக்கும் என்றவர், தமிழக அரசுக்கும் ஓர் இலக்கு நிர்ணயித்தார். அது இணையத்தின் முன்னணி மொழியாகத் தமிழை உயர்த்தும் இலக்கு!

இந்தியன் வங்கி நூற்றாண்டு விழாவிலோ, வங்கிகளுக்கான நிதிக் கொள்கையுடன், நாடு முழுவதுக்குமான ஒரு பொருளாதாரக் கொள்கையையும் வகுத்துவிட்டார் குடியரசுத் தலைவர்.

இக்கட்டான சூழலிலிருந்து விடுபட்டு வளர்ந்த இந்தியன் வங்கியின் அனுபவம், நாட்டின் வங்கிச் செயல்பாடு அமைப்புக்கே சிறந்ததொரு பாடம் என்று பாராட்டவும் தவறவில்லை கலாம்.

அடுத்த மூன்றாண்டுகளில் ஐம்பது லட்சம் விவசாயிகள் பயன்பெறுமாறு கடனுதவி பெருக வேண்டும். உயர்கல்வி கற்கும் இளைஞர்கள், சுய உதவிக் குழுக்களுக்குக் கடனளிப்பு அதிகரிக்க வேண்டும். வங்கிக் கிளைகள் பெருகி, மூன்றாண்டுகளுக்குள் இரண்டாயிரம் கிளைகள் நிறுவப்பட வேண்டும். அவற்றுள் பெரும்பாலானவை கிராமப் பகுதிகளில் திறக்கப் பட்டு, கிராம விவசாயப் பணிகளின் பெருக்கத்துக்கு உதவ வேண்டும். இவை குடியரசுத் தலைவர் அக்கறையுடன் முன்வைத்த ஆலோசனைகள்.

மொத்தத்தில், கலாம் ஆராய்ச்சியாளராகவும் கல்வியாளராகவும் சமூகச் சீர்திருத்த வாதியாகவும், பொருளாதார நிபுணராகவும் மனிதநேய ஆர்வலராகவும் ஆழ்ந்து சிந்தித்துத் தமது தமிழக விஜயத்தின்போது பேசியிருக்கிறார். குறிப்பாக, மிகுந்த புறக்கணிப்புக்குள்ளான விவசாயம், கல்வி, கிராமப்புற மேம்பாடு குறித்து அக்கறையுடனும் ஆக்கபூர்வமாகவும் அவர் பேசியவை அவசியம் பின்பற்றப்படவேண்டியவை.

அரசியல்வாதிகளும் கல்வியாளர்களும் நிறுவனங்களும் முக்கிய நிகழ்ச்சிகளுக்குக் குடியரசுத் தலைவர் கலாமை அழைப்பதால் பெருமையடைகிறார்கள் ; பிரபலமடைகிறார்கள். அவருக்கு, பதிலுக்கு இவர்கள் ஆற்ற வேண்டிய கடமை ஒன்றிருக்கிறது - அது, அவர் சொற்படி நடப்பதுதான்.



* சோழன்

திருச்சி மாவட்டம் முசிறியிலிருந்து எட்டு கி.மீ. தொலைவிலுள்ளது சோழன் பட்டி. அது மருவி இன்று சோளம்பட்டி யாகிவிட்டது. அங்கு ஒரு சோழ ராஜா வுக்குக் கோயில்! வியப்பாக இருக்கிறதா? ஆம், இந்தக் கோயில் திருச்சி மாவட் டத்தில் பெரும்பான்மையாக வாழும் முத்திரைய மக்களுக்கு இஷ்டதெய்வம் இப்பகுதியின் பதினெட்டுக் கிராமங் களின் குலதெய்வம். பூச்சு இல்லாத கருங்கல் சுவர் கொண்ட பெரிய கோயில்! குதிரை மேலே கருப்பசாமி, கருவறையில் யானை மீதமர்ந்த சோழாராஜா. மூலஸ்தானத்தில் தென்புறத்தில் கரூர் அம்மா (?) வடபுறத்தில் தண்டாயுத பாணி வீரபத்திரன் பெரியநாச்சி, பெரியக்காள், அத்தாபிள்ளை, அத்தா, சூரிய ராஜா, கன்னிமார்கள் ஆகியன பரிவார தேவதை கள்.

உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட ஒரு சோழ ராஜா, அங்கு தன் படைகளின் ஒரு பகுதியை இக்கிராமத் தில் நிறுத்தி நாட்டைப் பாதுகாத்துள் ளார். அவர் மறைவுக்குப் பின், வந்தவர் கள் ஒரு 'நடுகல்' வைத்து அவரை வழிபட ஆரம்பித்தனர். அப்போது வழி போக் கராக வந்த கணபதி அம்மா என்பவர் அங்கேயே தங்கி இராஜாவை வழிபட ஆரம்பித்தார். மேலும் கரூரில் தனக் கென்று இருந்த வீடு, நிலங்களின் வரு வாயிலிருந்து இக்கோயிலில் திருவிழாவை விமரிசையாகக் கொண்டாடியுள்ளார். அதனால்தான் இப்போது அவருக்கு அங்கு தனிச் சன்னிதி.

இங்கு ஆடிமாதத்தில் மூன்று நாட்கள் திருவிழா கொண்டாடப்படுகிறது. ஆடி பதினேழாம்நாள் சோழராஜாவுக்கு மாவிளக்குப் பூஜை, பதினெட்டாம் நாள்

* சோழராஜா கோயில்



* சரகு

# பேய் விரட்டும் சோழராஜா!

காவிரியில் சுவாமி பாலித்து, கோயில் வந்து சேருதல் அன்றிரவு பொங்கல் வைத்து சுவாமிக்குப் படைப்பார்கள். மறு நாள் காலையில் குழந்தைகளுக்கு முடியெடுத்து, பெயர் சூட்டி, காதுகுத்தும் விழா நடைபெறும். அன்று மதியம்தான் பேய் விரட்டும் விழா. இவ்விழாதான் இங்கு மிகவும் பிரசித்தி பெற்ற விழா!

"பத்தொன்பதாம் தேதி காலையில் பூசாரிகள் கருப்புசாமியைக் கிராமத்தைச் சுற்றி அழைத்து வரும்போது அவர்களுக்குப் பாதபூஜை செய்து அருள்வாக்கு கேட்பார்கள். அவர்கள் கோயிலுக்கு வரும்போது நிறைய பெண்கள் கோயிலில் வரிசையாக அமர்ந்திருப்பார்கள். அவர்கள் மேல் தண்ணீரைத் தெளித்து உடுக்கை அடிப்பார்கள். 'பேய்' பிடித்தவர்கள் தலைவிரித்து ஆடுவார்கள். ஆனால் பேய் பிடிக்காதவர்கள் அப்படியே அமர்ந்திருப்பார்கள். பேய் பிடித்தவரை பூசாரி விசாரித்துக்கொண்டே அவர் தலை முடியைப் பிடித்து முடிச்சு போட்டு அதில் சில முடிகளை எடுத்து புளியமரத்தில் வைத்து ஆணி அடிப்பார். அதோட அந்தப் பொண்ணுக்கு பிடித்திருந்த பேய் போய்விடும்" என்கின்றனர் சோளம்பட்டியில் வசிக்கும் சரகம், தர்மலிங்கமும்.

"நூறு வருஷத்துக்கும்மேல இந்தத் திருவிழா சோழராஜா கோயில்ல நடக்குது. பேய்விரட்டும் திருவிழா அன்னிக்குப் பத்தாயிரத்துக்கும் மேல மக்கள் வர்றாங்க. பேய் பிடிச்சிருந்தாத்தாங்க உடம்பையும் தலையையும் இந்த ஆட்டு ஆட்ட முடியும், சும்மாவெல்லாம் உடம்ப இப்படி முறிச்சு ஆட்ட முடியாது" என்கிறார் சோழ ராஜா கோயிலின் பூசாரி சோழன். **- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

## புத்தக விமர்சனம்

# க்ளோஸ் டு மை ஹார்ட்!



நித்யஸ்ரீ மகாதேவன்

சங்கீதக்காரர்கள் என்றாலே பொதுவாக சுவாரஸ்யமான மனிதர்களாக இருப்பார்கள். காரணம், பல ஊர்களில், பல அமைப்பாளர்களைச் சந்திக்கிறார்கள். அவர்கள் சட்டென்று எமோஷனலாகியும் விடுவார்கள். அதனால்தான் பாடல்களில் உள்ள எமோஷனை அப்படியே அவர்களால் வெளிப்படுத்திவிட முடிகிறது. சங்கீத உலகில் நிறைய மகான்களும் இருந்திருக்கிறார்கள்... இந்தப் பின்னணியில்தான் 'ஜுகல் பந்தி' சங்கீதக் கதைகளை வைத்துப் பார்க்க வேண்டும்.




எல்லாக் கதைகளுமே கருத்தாழம் மிக்கவை; சிந்திக்கத் தூண்டுபவை; மனத்தைச் சட்டென்று தொடக்கூடிய வகையைச் சேர்ந்தவை.

முதலில் இந்தப் புத்தகத்தை வெளிக்கொண்டுவந்த யதார்த்தா பென்னேஸ்வரனுக்கும், தொகுப்பாளர் ஷங்கரநாராயணனுக்கும் பாராட்டுக்கள்! இப்படி ஒரு தனித் தொகுப்பு வருவது இதுதான் முதல் தடவை என்று நினைக்கிறேன்.

சங்கீதக்காரர்கள் ஈகோயிஸ்ட்கள். இரங்கிவிடும் சுபாவமும் உண்டு. இதில் வரும் சிறுகதைகளில் அவர்களின் சுபாவம்தான் வெளிப்பட்டிருக்கிறது.

கல்கி, தி.ஜானகிராமன், லா.ச.ரா. போன்ற ஜாம்பவான்களிலிருந்து, சமீப கால எழுத்தாளர்கள் வரை அத்தனை பேரும் இடம் பெற்றிருக்கிறார்கள்.

சுவாமிநாத ஆத்ரேயனின் ஆரம்பக் கதையே களைகட்டிவிடுகிறது. நம்மை தியாகராஜரின் காலத்துக்குக் கொண்டு போய் எப்படி முடிக்கப் போகிறாரோ என்ற வியப்பை நமக்குள் ஏற்படுத்துகிறார்.

கதைகளில் வரும் பாத்திரங்களை நாம் நேரில் பார்த்திருக்கிறோமோ என்று நினைக்க வைக்கிறது. மனுஷ புத்தியில் எல்லாவற்றையும் தப்பாகவே நினைக்கிறோமோ என்று எண்ண வைக்கிறது.

'வீணை பவானியும்', 'நகுமோமு'வும் படிக்க நன்றாக இருக்கின்றன. 'ஈ ஜகமுலோ நிக்கெவரம்மா' மிக வித்தியாசமான நடையில் எழுதப்பட்ட கதை. ஜெயமோகனின் 'ஏறும் இறையும்' கூடத்தான். மௌனியின் கதை மனசைத் தொட்டது.

கர்நாடக சங்கீதம் என்பது சந்தோஷம் என்றுகூடச் சொல்லலாம். கர்நாடக சங்கீதம் என்பது ஒரு சின்ன வட்டம்தான். அதில் ஈடுபட்டவர்களுக்குத்தான் அந்த மகிழ்ச்சி தெரியும்.

என்றைக்கும் நிலைத்து நிற்கும் இந்த 'ஜுகல்பந்தி'. சங்கீதத் துறையில் இருக்கிறதால், இது க்ளோஸ் டு மை ஹார்ட்.

**ஒரு பின்குறிப்பு:** தில்லியில் இந்தப் புத்தகத்தை அமைச்சர் ப.சிதம்பரம் வெளியிட்ட நிகழ்ச்சியில் என் கச்சேரிதான் நடந்தது!

**ஜுகல்பந்தி - சங்கீதக் கதைகள்,**
**வடக்கு வாசல் வெளியீடு,**
**5210, பெசன்ட் ரோடு, கார்னெய்ல் சிங் ரயில்வே ஸ்டேடியம் அருகில்,**
**பஹர்கன்ஜ், புதுதில்லி-110 055**
**விலை ரூ.180/-**

# அருள்மிகு கல்யாணியப்பன் என வழங்கும் குருநாதஸ்வாமி ஆலய முன் மண்டப திருப்பணி, உடையார் கோவில், பாபநாசம் வட்டம்



## தஞ்சாவூர் மாவட்டம்

*அருள்மிகு குருநாதஸ்வாமி த்யான ஸ்லோகம்*

*சிவகேசவ சம்பூதம் சுதாம்சு மகுடோஜ்வலம் த்ரிலோசனம் தாம்ரோ மனோகர முகாம்புஜம் விருஷஸ்கந்தம் சதுர்பாகும் விசால திருடவக்ஷசம் த்ரிசூல கட்க டமரு சக்ராயுத தாரிணம் சுராசுர சிரோரத்ன நீராஜித பதத்வயம் இச்சாசக்திமயீம் பூர்ணாம் க்ரியாசக்திம்ச புஷ்கலாம் தததம் பார்ஸ்வயோர் தேவ்யோ ஞான சக்திமயம் ப்ரபும் த்யாயாமி கருணாமூர்த்திம் குருநாதம் குலேஸ்வரம்.*

பேரன்புடையீர்,

தமிழகத்தின் நெற்களஞ்சியமான தஞ்சாவூர் மாவட்டம், பாபநாசம் வட்டம், தஞ்சாவூர் - திருவாரூர் சாலையில் உள்ள, உடையார்கோவில் கிராமத்தில் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் பழமைவாய்ந்ததும், தஞ்சையை ஆண்ட சோழ மன்னர்களால் சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்னதாகக்கட்டப்பட்டதும் தஞ்சை சரஸ்வதி மகாலில் உள்ள பழங்கால ஓலைச்சுவடிகளில் குறிப்பிடப்பட்டுள்ள கல்யாணியப்பன் என வழங்கும் குருநாதஸ்வாமி ஆலயம் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னதாக 15 லட்சம் மதிப்பீட்டில் புதுப்பிக்கப்பட்டு நாட்டின் அனைத்து சமூகத்தினரும் குறிப்பாக குருநாத ஸ்வாமியை குலதெய்வமாக கொண்ட தெலுங்கு பிராமணர்களும், திருமணதடை, தொழில் அபிவிருத்தி, குடும்ப ஒற்றுமை, கடன் நிவர்த்தி, மனஅமைதி போன்றவைக்காக பெருமளவில் வந்து தரிசித்து பயனடைந்து வருகின்றனர். அருள்மிகு குருநாதஸ்வாமியின் பக்தர்கள் இனம், இடம், மொழி கடந்து உலகெங்கும் பரவி வாழ்ந்து வருகிறார்கள். அருள்மிகு குருநாதஸ்வாமிக்கும் அவர்களுக்கும் உள்ள உறவு உணர்வு பூர்வமானது. மேற்படி ஆலயத்தின் எதிரில் உள்ள மண்டபம் பக்தர்களின் வசதிக்காக சுமார் 4 லட்சம் மதிப்பீட்டில் விரிவாக்கம் செய்ய வேண்டி உள்ளதால் பக்தகோடிகள் அனைவரும் தங்களால் இயன்ற பொருளுதவியை அனுப்பி உதவிட கேட்டுக் கொள்கிறோம்.

**ஆண்டிற்கு ரூ.1000 நித்யபூஜைக்கான நிதியை தவறாமல் அனுப்பி நித்ய பூஜைகள் தவறாது நடைபெற ஒத்துழைப்பு நல்கிட வேண்டுகிறோம்.**

இங்ஙனம்,

**கல்யாணியப்பன் சேர்வராயன் சேவா சங்கம் மற்றும் கிராமவாசிகள்**

*தலைவர் :*

**எஸ்.மணிபாண்டியர்,** ராணி குரூப்ஸ், தஞ்சாவூர். ✆ 9344890612

*செயலாளர் :*

**தி.பழனிவேல்பிள்ளை,** பெரியகுடி. ✆ 04367 279776

*பொருளாளர் :*

**எஸ்.கோவிந்தராஜ காடவராயர்,** உடையார்கோவில், கொக்கேரிவழி. ✆ 94438 47206

*இணை செயலாளர் :*

**டி.மணிமொழியன்,** தஞ்சாவூர், வீரராகவன் மேல்நிலைப்பள்ளி, ✆ 04362 275895

*கோவில் பூஜகர் :*

**பி.வெங்கட்ராம சிவாச்சாரியார்,** உடையார் கோவில். ✆ 04374 294226

*உப தலைவர்கள் :*

**கே.பி.நடராஜபாண்டியர்,** புத்தூர். ✆ 9444412628

**சோமசுந்தரம்பிள்ளை,** 50, அண்ணாமலை நகர், தஞ்சாவூர். ✆ 04362 233876

**ஆர்.குணசேகரன் பாண்டியர்,** பாரதி ஏஜன்ஸிஸ், புத்தூர், அம்மாபேட்டை. ✆ 94431 32509

குறிப்பு : நன்கொடைகள் மற்றும் நித்ய பூஜை நிதி போன்றவைகளை கல்யாணியப்பன் சேர்வராயன் சேவாசங்கம், அம்மாபேட்டை, இந்தியன் வங்கி, வங்கி Code எண் 1335, என்ற பெயரில் DDயாக மேற்கண்ட விலாசத்திற்கு அனுப்பி உதவிட பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

என் முதல் பாடலான 'பல்லாங்குழியின் வட்டம் பார்த்தேன் ஒற்றை நாணயம்' வெளிவந்து மிகப் பிரபலமாக இருந்த சமயத்தில் என் சக கவிஞர் ஒருவர் பாராட்டு மழை பொழிந்துவிட்டு, இப்படிச் சொன்னார்: "பல்லாங்குழியில் இருப்பது குழி வட்டம். அதை நாணயத்துக்கு உவமையாக்கியிருப்பது சரியன்று."

'தாமரை முகமென்றும் நிலவு வதனமென்றும் நீங்கள்கூட எழுதியிருக்கிறீர்கள். தாமரை மாதிரியா முகமிருக்கிறது, நிலவு போல வட்டமாகவா வதனமிருக்கிறது?' என்று அப்போது சமாளித்தாலும் உவமையைப் பொருத்தமாகப் பயன்படுத்தத் தவறிவிட்டேனோ எனத் தோன்றியது.

ஆனால், தம் பெயருக்கு முன்னால் உவமைக் கவிஞரென்று நாமகரணம் இடுவதற்குத் தகுதியாக ஒருவர் இருந்திருக்கிறார் என்பது பெருமிதம் கொள்ள வைக்கிறது. அவர், கவிஞர் சுரதா. கவிஞர் மரித்துப்போன ஜூலை 20 அன்று வானொலியில் 'ஆடி அடங்கும் வாழ்க்கையடா' பாடலைப் பத்து தடவைக்கு மேலாகக் கேட்க முடிந்தது. சுரதா தமது ஆசையாகச் சொன்னதும் அதுவே தான்! தாம் இறந்த பிறகு 'அமுதும் தேனும் எதற்கு' பாடலை முதலிலும், 'ஆடியடங்கும் வாழ்க்கையடா' பாடலை இறுதியாகவும் ஒலிபரப்பக் கேட்டிருந்தாராம்.

நாகப்பட்டினத்தை அடுத்த பழையனூரில் பிறந்த ராஜகோபாலன், பாரதிதாசன் மீது பற்றுக் கொண்ட காரணத்தால் சுப்புரத்தினதாசனாகி, அதுவே சுருங்கி சுரதாவானது யாவரும் அறிந்தது.

ஒரு கட்டத்துக்கு மேல் நமக்குக் கிடைக்கும் பாராட்டைத் தக்கவைக்க, அதிக உழைப்பை மேற்கொள்ள வேண்டி வரும். சொல்லி விட்டார்களே என்பதற்காக, அந்தச் சொல்லை வேத வாக்காக்க பெரும் பாடுபட வேண்டும். ஆனால், சுரதாவுக்கு இவ்வாறு அது சங்கடப்படுத்தும் பட்டமாக இருந்திருக்கவில்லை. இயல்





# சரியில்லாத பல்லாங்குழி!

பாகவே, அவரால் அவ்விதம் எழுத முடிந்திருக்கிறது.

எழுத்தாளர் பெருமாள் முருகன், சுரதா பற்றிய தமது அஞ்சலிக் கட்டுரையில், 'உவமையை அடுக்குவதில் அதிக கவனம் செலுத்தி, கவிதையைத் தேக்கப்படுத்திக் கொண்டார்' என எழுதியிருந்தார். பெருமாள் முருகனின் வார்த்தைகள் காழ்ப்பற்றவை. தமது முந்தைய தலைமுறைப் படைப்பாளர் மீது அக்கறை பொருந்திய ஆய்வுப் பார்வையாக அவற்றைக் கொள்வதில் தவறில்லை. உண்மையில், அந்தப் பேருக்குப் பொருத்தமானவராக சுரதா தன்னை நிரூபித்திருக்கிறார்.

'யானைத் தந்தம் போலே பிறை நிலா', 'தண்ணீரின் ஏப்பம்தான் அலைகள்', 'நெளியும் பாம்பு போல நதி', 'பாடை, காலில்லா கட்டில்', 'பனி, நிலா வழிக்கும் வியர்வை' 'வெற்றிலை போடாமல் வாய் சிவந்த கிளிகள்' ஆகியன சுரதாவின் உவமைத் தெறிப்புகளில் சில!

புதுக்கவிதைக்குரிய சொல்லாட்சியை புதுக்கவிதை பரவலாகும் முன்பே மரபுக் கவிதைகளில் பயன்படுத்திய பெருமை சுரதாவுக்கே உரியது. பற்களைப் போன்று எண்ணிக்கையில் குறைவாகவே திரைப்படங்களுக்குப் பாடல்கள் எழுதியிருப்பதாக அவரே சொல்லும்போது, எண்ணிக்கைக்குப் பற்களை உவமை சொல்லும் அவருடைய கம்பீரம் ஈர்க்கிறது.

'நிழலழகே நெஞ்சத்தை
மயக்குமாயின்
நேரழகு
வாட்டாமல்
விடுமோ
என்னை?'

'உன் நிழலை மிதித்தாலும் நெஞ்சு வலிக்குதடி' என்று தய். கந்தசாமி தமது 'தனி இருட்டு' தொகுப்பில் எழுதியிருப்பதை வாசிக்கையில், சுரதாவின் மேற் கூறப்பட்ட வரிகள் நெஞ்சில் நிழலாடின. தூரத்தில் காதலியின் நிழலுருவம் தென்பட்டாலே நெஞ்சு மயங்குகிறது எனில், நேரில் பார்க்கும்போது என்னவாகும் என்பது ரெண்டாயிரத்து சொச்ச ஆண்டு சங்கக் கவிதை மரபின் நீட்சியில்லாமல் வேறென்ன?

'நிலவின்
நிழலோ நின் வதனம் - புது
நிலைக் கண்ணாடியோ
மின்னும் கன்னம்!'

- எதைச் சொன்னாலும் சுரதாவுக்கு உவமை தேவைப்படும். உவமையில்லாமல் அவரால் உரைநடைகூட எழுத முடியாது எனும் அளவுக்கு உவமைக்காக உழைத்திருப்பவர்.

'அவள் மயானம் தின்னும் மாத்திரையானாள்' போன்ற வசன நடையிலும் சுரதாவால் உவமையன்றி இயங்க முடிந்ததில்லை. கவிஞர் அப்துல் ரகுமானின் 'நேயர் விருப்பம்' கவிதை நூலுக்கு அணிந்துரைப்பா எழுதுகையில், 'எழுதுகின்ற கவிஞர்களுள் அப்துல் ரகுமான், முன்

திரையிசைத் தெம்மாங்கு தொடர்........................ 5

நிற்கும் மோனையைப் போல் முன் நிற்கின்றார்' என்றெழுதி வியப்பைக் கூட்டியிருப்பார். 'தண்ணீரின் வாக்கியந்தான் ஆறெ'ன்ற ரகுமானின் உவமை தமக்குள் ஏற்படுத்திய நெகிழ்வையும் குறித்திருப்பார்.

'ஆடும் ஊஞ்சலைப் போலே
அலையே ஆடுதே' என்ற 'என் தங்கை' படத்துப் பாடலை எழுதி இசையமைப்பாளரிடம் கொடுத்து விட்டு, இந்தப் பாடலுக்கு நடிக்கப் போகும் கதாநாயகி யாரென்று கேட்டிருக்கிறார். அவர் 'பானுமதி' என்று சொன்னதும் 'அந்த அம்மையாருக்குக் 'கொடியிடை' அல்லவே, நான் கொடியிடை என்று எழுதியதை மாற்றி விடுங்கள்' என்றதாக சினிமா வட்டாரத்தில் ஒரு புரளி உண்டு. அதனால், திரைப் படங்களுக்கு நிறைய பாடல் எழுத முடியாமல் போனதாகவும் குதர்க்கம் பேசும் கவிஞராகக் குற்றம் சாட்டப் பட்டதாகவும் இத்தனை ஆண்டுகள் கழித்தும் உலவும் வதந்திக்கு, சுரதா இருந்திருந்தால் என்ன உவமை சொல்வாரோ?



* சுரதா

நாடோடி மன்னன் திரைப்படத்தின் பாடல் எம்.ஜி.ஆருக்குக் கொடுத்த புகழைப் போலவே, சுரதாவுக்கும் புகழை அளித்தது. அவர் எழுதிய 'கண்ணில் வந்து மின்னல்போல்' பாடலில் உள்ள

'சுடர் மின்னல் கண்டு
தாழை மலர்வது போலே
உன்னைக் கண்டு
உள்ளம் மகிழ்ந்தேனே' எனும் வரிகள், இலக்கியச் செறிவுடையதாக சிலாகிக்கப்பட்டது மிகையில்லை. இது குறித்து அவரிடம் கேட்கையில், தாம் வாசித்த சங்கக் கவிதைக் குறிப்பிலிருந்து அதை எடுத்தாண்டதாகக் கூறினார்.

சாட்சாத் இது சுரதாவின் வரிகள் என்று யாரும் எளிதாகக் கண்டுகொள்ளும் பிரபல்யம் உடையனவாக அவருடைய ஆக்கங்கள் அமைந்திருக்கின்றன. 'தேன்மழை' 'துறைமுகம்' 'சுவரும் சுண்ணாம்பும்' ஆகியன இவரது கவிதைத் தொகுப்புகள். 'மங்கையர்க்கரசி' திரைப் படத்துக்கு வசனமெழுதும் முகமாகத் திரையில் புகுந்து ரத்தினச் சுருக்கமான பாடல்களையும் எழுதியிருக்கிறார்.

'கரை தாவும் அலைபோல்
எனைக் கொஞ்சவே வந்த
தூதரே
கண்ணாடியால் ஓவியம் தனையே
மறைத்தால் தெரியாதோ?' என்று 1953-இல் ஜெனோவா திரைப்படத்தில் எழுதியிருப்பார்.

கண்ணாடியால் ஓவியத்தை மறைக்க இயலாது. காலத்தாலோ, மரணத்தாலோ சுரதாவை, இவ்வுவமையை மறைக்க இயலாததைப்போல. நான் எழுதத் தொடங்கியிருந்த காலத்தில் ஒருமுறை எழுத்தாளர் தஞ்சை ப்ரகாஷ் ஏற்பாடு செய்த விழா ஒன்றுக்கு வந்திருந்த சுரதாவிடம், என்னை என் நண்பர் அறிமுகப்படுத்தி வைத்தார். 'நிறைய படி. நிலவைப் பற்றி எழுதுவதற்கு முன்பு நிலவைப் பற்றி இதுவரை வந்திருக்கும் கவிதைகளை வாசித்துப் பார்' என்றார். அதையே ஒரு தொலைக்காட்சி நேர்காணலிலும் தெரிவித்தார்.

படகுக் கவியரங்கம், தேர்க் கவியரங்கம், விமானக் கவியரங்கம் என கவியரங்குக்குப் புதிய பொருளையும் கவர்ச்சியையும் கூட்டுவதில் தமது கடைசி காலத்தில் சுரதா கவனம் செலுத்தினார். எந்த ஊர், என்ன சாதி, என்ற கேள்விகளுக்கு இடையிலேயே ஒவ்வோர் ஊரின் பெருமையையும் அந்த ஊர்களில் வாழ்ந்த பெரியோர்களையும் பிரமுகர்களையும் அவரால்

நினைவு கூர முடிந்தது.

விசாலமான தேடல் ஒரு கவிஞனின் படைப்பூக்கத்துக்கு எத்துணை துணை புரியும் என்று அவரிடமிருந்து கற்கலாம்.

'விண்ணுக்கு மேலாடை
வெயில் விழுங்கும் மேகம்
வீணைக்கு மேலாடை
நரம்புகளின் கூட்டம்
கண்ணுக்கு மேலாடை
காக்கின்ற இமைகள்
கனவுக்கு மேலாடை
தேங்குகின்ற தூக்கம்'

- தமக்குச் சரியெனப்பட்டதை, எதிர் வினைவுகளை யோசிக்காமல் மேடையிலேயே தெரிவிக்கும் அவருடைய பண்பை யாரும் தவறாகக் கொண்டதில்லை. தமிழக வீதி முழுக்க அவருக்குப் பழக்கமாயிருந்தது. இலக்கிய அமைப்புகளும் தனியார் நிறுவனங்களும் அவர் தமிழைப் புளகாங்கிதத்தோடு மதித்தன.

எந்த ஊருக்குப் போனாலும் அந்த ஊரில் வாழ்ந்த பெரியோர்களின் நினைவாக, அந்த ஊரின் மண்ணைச் சேகரித்து வந்து பாதுகாப்பதைப் பெருமையாகக் கருதியிருக்கிறார். பாத மண்ணிலும் மரித்தோரின் சுவட்டைப் பார்க்கிற மனது சுரதாவுடையது.

'கார் என்று பேர் படைத்தாய்
ககனத்துறும்போது
நீர் என்று பேர் படைத்தாய்
நெடுந்தரையில் வீழ்ந்தபின்
வார்சடை மென் கூந்தல்பால்
ஆய்ச்சியர்கை வந்தபின்
மோர் என்று முப்பேரும்
பெற்றாயோ?' - என்று நீர்மோர் கொடுத்த ஆய்ச்சியை காளமேகம் நையாண்டி செய்தது போல் உவமைகளை அங்கதச் சுவைக்காக ஆக்காதவர் சுரதா. தனிப்பாடல் திரட்டு முழுக்க இப்படியான பாக்கள் பரவிக் கிடக்கின்றன. அன்னமிடத் தாமதித்த நாகப்பட்டினத்துச் சத்திரக்காரரை, ஆண்டவனைப் புகழச் சொன்னால் நிந்தாஸ்துதி செய்து தமது மேட்டிமையைக் காளமேகம் விரயமாக்கியது போல, சுரதா ஒருபோதும் உவமைகளை மேலோட்டமாக வெளிப்படுத்தியதில்லை. தம் வரையறைக்கு, தம் கருத்துக்கு ஏதுவான விஷயங்களை முடிந்த மட்டும் செப்பமாகவே வெளிப்படுத்திச் சென்றிருக்கிறார்.




"நேத்து கபாலி என் வீட்டுக்கே திருட வந்துட்டான்."
"அடப்பாவி! அப்புறம்?"
"விடுவேனா? டபுள் மாமூல் வாங் கிட்டேன்."
- மதுக்குட்டி

'குழந்தையோ பெற்றோர் எச்சில்
கூடையோ குறத்தி எச்சில்
பழங்களோ பறவை எச்சில்,
பால்தயிர் இடைச்சி எச்சில்' எனும் விதமாக எதார்த்தச் சிலேடையில் தன் எண்ணங்களை யாத்திருக்கிறார். 'பெருந் தீ மீதிலே ஈமொய்ப்பதுண்டா' என்றும் 'நீலவான் மீதிலே நிழல் படுவதுண்டோ' என்றும் எழுதிய சுரதாவுக்கு சிலேடைக்கும் உவமைக்குமுள்ள மெல்லிய இடைவெளி மிகுதியாகவே புரிந்திருக்கிறது. எனவேதான், எழுத்தைத் தவமாகக் கருதி, தமக்குப் பின்னும் தளைத் தெழும் தலைமுறைக் கவிஞர்களுக்காகப் பாடுபட்டார். எழுத்தை வெறும் ஆத்ம திருப்திக்கான செயலாகக் கருதாமல், அடுத்த கட்டத்துக்கு அதைக் கொண்டு செல்ல முயன்றார். இன்றைய நவீனப் போக்குகளுக்கு அவருடைய பங்களிப்பு பின்தங்கியதாகத் தோன்றினாலும் அவர் காலத்தில் அவர் சக்ரவர்த்தி. புறாவுக்குச் சதை கொடுத்த அரசன் போலத் தமிழுக்கு நிமிர்வு கொடுத்த தலைமகன். நிறைய எழுதாமல் நிறைவாக எழுதுவது சுரதாவின் தனித்துவம். அதுவே, தலைமைத்துவம்; அமரத்துவம்!

(வீசும்)

படம்: ஸ்ரீஹரி

**ப**ம்பரம் போல் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்த பட்டாபிக்கு அந்தக் கிழவரைக் கண்டதும் கோபம் வந்தது. சிவயோக சித்தரான அபேதானந்தாவைப் பார்க்க வரிசையாக வந்து கொண்டிருந்த பெரிய மனிதர்களை வரவேற்று உட்கார வைப்பதில் பிஸியாக இருந்தவரை, பிச்சைக்காரன் போலிருந்த அந்தக் கிழவர் நச்சரித்ததில் அவருக்கு எரிச்சல் மூண்டது. போதாக் குறைக்கு, பக்கத்தில் கிழிந்த சட்டையும், அரை நிஜாரும் அணிந்து அரைக்கிறுக்கு போல் தோற்றமளித்த பையன் ஒருவனைக் கையில் பிடித்துக் கொண்டு, பெரியவர் போகும் வழியில் தடங்கல்செய்து கொண்டிருந்தது பட்டாபிக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை.

''என்னப்பா வேணும்



உனக்கு? ஏன் வீணாத் தொந்தரவு செய்யறே?" பாய்ந்தார் பட்டாபி.

"ஐயா! ஒரு தபா சாமியைப் பாக்க வுடுங்க! காலைலே வந்தவன் மணிக் கணக்கா நிக்கறேன்! கொஞ்சம் தயவு பண்ணுங்கய்யா!" என்று அம்மாசிக் கிழவர் கெஞ்சினார்.

"அவரை இப்ப பாக்க முடியாது! நீ அவரை என்ன குறி சொல்றவர்னு நெனச்சியா? சாமி ஒரு சிவயோக சித்தர்! அவர் சொல்ற தத்துவம் எல்லாம் உன்னை மாதிரி ஆளுங்களுக்குப் புரியாது... போ" என்று எரிந்து விழுந்த பட்டாபி, தூரத்தில் அரசாங்க அதிகாரி ஒருவர் ஜீப்பில் வந்து இறங்குவதைப் பார்த்துவிட்டு, அவரை வரவேற்க ஓடினார்.

சன்னியாசியின் மற்றொரு சீடரான ஜெகன், சகல மரியாதையுடன் ஒரு சரிகை அங்கவஸ்திர நபரை வழிநடத்தி சன்னியாசியின் முன் அமரச் செய்தார். சரிகை ஆசாமி அவரை வணங்கி விட்டு, "சாமி, நான் செய்யாத தர்மமில்லை, போகாத கோயில் இல்லை. அப்படியும் வியாபாரத்தில் நஷ்டமாயிடுத்து. புது வியாபாரம் சூடு பிடிச்சா பெருமாளுக்குத் தங்கத் தேர் செய்யறதா வேண்டிக்கிட்டிருக்கேன்! நீங்களும் உங்க வாயாலே ஆசிர்வாதம் செஞ்சா எனக்கு யோகம் அடிக்கும்!" என்று குழைந்தார்.

சன்னியாசி புன்னகைத்தார். "திருமால் திருபுவனச் சக்கரவர்த்தி! உலகத்தில் உள்ள செல்வம் அனைத்தும் அவருக்கே சொந்தம். நீங்கள் தரப்போகும் தங்கத் தேருக்கா அவர் ஏங்கிக் கொண்டிருக்கிறார்? அதை விட அவர் படைத்த மக்களில் வறுமைக் கோட்டில் இருப்பவர்களுக்கு அந்தப் பணத்தைச் செலவிட்டு அவர்கள் வாழ வழி செய்யுங்கள்! ஏழை, எளியவர்களுக்கு மனமார நீங்கள் செய்யும் தானம் இறைவனையே சென்றடையும். போய் வாருங்கள்" என்று சொல்லியனுப்பினார்.

"அப்பா... நீ எதுக்கு என்னை இங்கே கூட்டியாந்தே? இந்தச் சாமி யாரு?" என்று கேட்ட தன் மகனை வேதனையுடன் நோக்கினார் அம்மாசி. பதினாறு வயதாகியும் மூளை வளர்ச்சியடையாத தன் மகன் முத்துவை நினைத்து வேதனைப் படுவதா, வயதான காலத்தில் அவன் தனக்கு ஆதரவாக இருப்பான் என்ற நம்பிக்கை நலிந்து போனதை நினைத்து வேதனைப்படுவதா என்று புரியாமல் மனம் குமைந்தார். காலம் கடந்து பிறந்தாலும், பிறந்தது ஆண் பிள்ளையென்பதால் முத்து பிறந்தபோது மிகவும் மகிழ்ந்த கிழவரின் இதயம், இப்போது தன் பிள்ளையின் எதிர்காலமே இருளடைந்து இருப்பதையெண்ணி நொறுங்கிப் போனது. சன்னியாசி ஒருவர் தம் ஊருக்கு வந்திருப்பதையறிந்த கிழவர், அவர் மனதார ஆசி வழங்கினால் தம் மகனுக்கு நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையுடன் ஓடி வந்திருந்தார்.

"எத்தினி நேரம் நிக்கணும் அப்பா?" என்று சிணுங்கிய முத்துவை, அம்மாசி சமாதானப்படுத்தினார்.

"கொஞ்ச நேரம் பொறுடா! சாமியை ஒரு தபா உளுந்து கும்பிட்டோம்னா நம்ம கஸ்டமெல்லாம் போயிரும்!" என்றார் அம்மாசி.

"உளுந்து கும்பிட்டா சாமி திங்கறதுக்கு மிட்டாயி தருமா?" என்று கேட்ட முத்துவைப் பெரியவர் வருத்தத்தோடு பார்த்தார்.

"அப்பா, எனக்குப் பசிக்குது. உன்

# சன்னியாசி!

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

பிரசுரத்துக்குத் தேர்வான கதை

னோட கட்டுச் சோறு மூட்டையை எடு. இப்பவே சாப்பிடலாம் வா" என்றான் முத்து.

"கொஞ்சம் பொறுடா! சாமியைப் பாத்துட்டு அப்புறமேல சாப்பிடுவோம்!" என்று அம்மாசி அவனை மீண்டும் சமாதானப்படுத்தினார்.

இப்போது சாமியார் யாரோ ஒரு பெரிய மனிதருக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தார். "ஏராளமான தான தருமங்கள் செய்தும் இறைவன் கண் திறக்கவில்லை என்று புலம்புகிறீர்கள். ஆனால் நீங்கள் எப்படிச் செய்தீர்கள்? உங்களுடைய தர்ம காரியங்கள் ஊருக்கெல்லாம் தெரியட்டும் என்று விளம்பரப்படுத்தினீர்கள். ஆகவே, நீங்கள் புகழைத்தான் தேடுகிறீர்கள்; இறைவனைத் தேடவில்லை! பிறகு இறைவனை ஏன் குறை கூறுகிறீர்கள்? மற்றவர்களுடைய துன்பத்தைக் கண்டு இரக்கப்பட்டு உதவி செய்யுங்கள்! இறைவன் உங்களை நோக்கிக் கண்திறப்பான்!" என்று கூறி அனுப்பினார். தலையைப் பலமாக ஆட்டிவிட்டு மேடையிலிருந்து இறங்கிய அந்தப் பெரிய மனிதர் மீது தெரியாமல் முத்து மோதிக் கொள்ள, "சீ நாயே... தள்ளிப் போடா..." என்று ஆசீர்வாதம் செய்துவிட்டுப் போனார்.

"ஏண்டா, அறிவில்லையா உனக்கு? தள்ளிப் போய் நில்லுன்னு எத்தனை தரம் சொல்றது..." என்று ஜெகன் கிழவரை நோக்கி உரக்கக் கத்தியது எல்லோரையும் – குறிப்பாக சன்னியாசியின் செவிகளையும் எட்டியது. அப்போதுதான் அவர் கவனம் முழுமையாக அம்மாசி மீது திரும்பியது. 'இவர் நீண்ட நேரமாக நின்று கொண்டிருக்கிறார் போல் தோன்றுகிறதே... பக்கத்தில் இருப்பது அவருடைய மகனா? வயது முதிர்ந்த இந்த ஏழைப் பெரியவரை என்னை நெருங்க விடாமல் இப்படி விரட்டியடிக்கிறார்களே?' என்று எண்ணிய சன்னியாசி, ஜெகனை சைகை செய்து வரவழைத்து, கிழவரைத் தன்னிடம் அனுப்பும்படி கூறினார். சரியென்று தலையசைத்த ஜெகன், நேராகச் சென்று ஆசிரமத்துக்கு டொனேஷன் தரவிருக்கும் கோபாலனை அழைத்துச் சென்று சன்னியாசி முன் அமர்த்தினான். உணர்ச்சிகளை முற்றும் கடந்த துறவியின் முகம் இலேசாகச் சுளித்தது.

கோபாலன் சன்னியாசி முன் அமர்ந்து, தன் குறைகளைப் பட்டியலிட்டுப் புலம்ப, சன்னியாசி திடீரென்று எழுந்துவிட்டார்.

அப்படி அவர் எழுந்து நின்றதைக் கண்டதும்,



• குடும்பத்துடன் நாராயணமூர்த்தி...

## இன்ஃபோசிஸில் சேர இஷ்டமில்லை!

இன்ஃபோசிஸ் நிறுவனர் நாராயணமூர்த்தி பதவியிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார். அமெரிக்காவில் படிக்கும் அவரது மகள் அக்ஷதா மற்றும் மகன் ரோஹனுக்கு இன்ஃபோசிஸில் சேர விருப்பமில்லை. அண்மையில் இருவரும் பெங்களூர் வந்திருந்தனர். ரோஹன் கூறுகையில், "நாங்கள் இதுவரை பிறந்த

கூடியிருந்தவர்களிடையே சலசலப்பு ஏற்பட்டது. "என்னாச்சு..." "சுவாமிகள் ஏன் ஆசீர்வதிப்பை நிறுத்திவிட்டார்?" என்றெல்லாம் அனைவர் மனதிலும் கேள்விகள்... அதைப் பொருட்படுத்தாத சன்னியாசி மேடையிலிருந்து இறங்கி, கீழிருந்தவர்களைத் தாண்டிக் கொண்டு நேராகக் கிழவரை நோக்கிச் சென்றார்.

அம்மாசியால் தன் கண்களையே நம்ப முடியவில்லை! யாருடைய தரிசனத்துக்காக மணிக்கணக்காகக் காத்திருந்தோமோ, அவரே தன்னை நோக்கி வந்து, தன் எதிரில் நின்றதும் அம்மாசி திக்கு முக்காடிப் போனார்.

"என்னப்பா... ரொம்ப நேரமா உன்னைக் காக்க வைச்சிட்டேனா? உனக்கு என்ன வேணும்?" என்று சன்னியாசி தம்மைக் கேட்டதும், அதுவரை அவரிடம் சொல்வதற்காகப் பட்டியலிட்டு வைத்திருந்த் குறைகள் எல்லாம் கிழவருக்கு அந்தச் சமயம் சுத்தமாக மறந்தே போய் விட்டன. உடலெல்லாம் பதற, நாக்கு உலர்ந்துபோக... அவரால் எதுவும் பேசவே முடிய வில்லை.

"சாமி... சாமி..." என்று குழறிய அம்மாசி மரமாக நின்றார்.

"கேளுப்பா! என்ன வேணுமோ கேளு!" என்று இளமுறுவலுடன் சன்னியாசி கேட்க, அம்மாசி அவர் முகத்தைப் பார்த்தபடியே உறைந்து போனார். திடீரென அவருக்குள் ஏதோ பொறி தட்டியதுபோல் இருந்தது. இதயத்தில் உணர்ச்சி பீறிட ஓர் உத்வேகம் பொங்கியெழுந்தது. வார்த்தைகள் பிரவாகமாய் வந்தன.

"சாமி... நீங்க மகானுங்க... உலக நன்மைக்காகப் பாடுபடற உத்தமர் நீங்க... மத்தவங்களுக்காகவே வாழுறீங்க... ஆனா... உங்களை யாரும் கவனிக்க மாட்டேங்கிறாங்களே சாமி! ராவுக்குப் பட்டினி கெடந்தீங்களாம், இப்பவும் காலைலே எழுந்திருச்சதிலர்ருந்து எதுவும் சாப்பிடாமலே இருக்கீங்களே சாமி... உங்க சிஷ்யகோடிங்க பேசிக்கிட்டத கேட்டு மனசு வாடிடுச்சு சாமி... ஊருக்காகப் பாடு படற உங்க வயிறு காயலாமா? சாமியானாலும், எங்களைப் போல மனுச ஒடம்பு தானே உங்களுக்கும்! இந்தாங்க சாமி, நான் கொண்டாந்த கட்டுச் சோறு. இதச் சாப்பிடுங்க சாமி. வயித்தைக் காய விடாதீங்க சாமி. இந்தாங்க சாமி..." என்று பசியுடன் வந்த மகனுக்குப் பரிதவித்து உணவூட்டும் அன்னையைப் போல், அம்மாசி தனக்காகக் கொண்டு வந்த சோற்று மூட்டையைப் பரபரப்புடன் அவிழ்க்கலானார்.

திக்பிரமை பிடித்து நின்றார் சன்னியாசி.

தன்னை நோக்கி இரு கரங்களையும் நீட்டிய சன்னியாசிக்கு உணவிடச் சென்ற அம்மாசி, அந்தக் கரங்கள் தன்னை நோக்கிக் குவிந்து வணங்குவதைக் கண்டு அதிர்ச்சியுற்று "சாமீ...!" என்று அலறினார்.

---

நாளே கொண்டாடியதில்லை. அதற்குச் செலவழிக்கும் பணத்தில் ஏழைகளுக்கு உதவலாம். அம்மா பாக்கெட் மணியெல்லாம் கொடுத்ததில்லை. எப்போதாவது பணம் கொடுத்தாலும் அதற்குச் சரியான கணக்கு கேட்பார். நான் படித்த பிஷப் காட்மன் பள்ளிக்கு இப்போது சென்றபோது என்னை என் அப்பாவின் பெயரைச் சொல்லி அறிமுகப்படுத்தினார்கள். அப்பள்ளியில் நான் நிறைய பரிசுகளும் பாராட்டுகளும் பெற்றுள்ளேன். அதையெல்லாம் சொல்லாமல் இப்படி அறிமுகப்படுத்தியது எனக்குப் பிடிக்கவில்லை. அப்பா அரசியலுக்கு ஏற்றவர் இல்லை" என்கிறார்.

அக்ஷதா பேசுகையில், "தற்போது இந்தியாவுக்கு வந்தபோது, அம்மா தான் கொடுத்த பதினைந்து ரூபாய்க்கும் கணக்கு கேட்டது இன்னும் எங்கள் உறவைப் பலப்படுத்தியுள்ளது. நான் மட்டுமே எங்கள் வீட்டில் 'ஆர்ட்ஸ் குரூப்' படித்தவள். எம்.பி.ஏ. முடித்துவிட்டேன். தனியாக ஒரு நிறுவனம் தொடங்கலாம் என்றுள்ளேன்" என்கிறார், அடக்கமாக.

**- அனிதா ராமச்சந்திரன்**

# வேட்டையாடு விளையாடு

தியேட்டருக்குள்ள நுழையறதுக்கு முன்னாடியே ப்ளாக் டிக்கெட் பார்ட்டி ஒண்ணு, 'இன்னா பாப்பா, கவுன்ட்டர்ல ஃபுல்லு; டிக்கெட் வேணுமா?'ன்னு ஊடால புகுந்துச்சு. நான் அமைதியா போறதைப் பார்த்து, 'நல்ல படம்மா. 'காக்க காக்க' படத்தை எடுத்த கௌதம் தான் டைரக்டரு. கமலு போலீஸ் அதிகாரியா துவம்சம் பண்ணியிருக்காரு'ன்னாரு. நான் கண்டுக்கவே இல்ல. கடுப்பான ப்ளாக்கு, 'அடப் போம்மா, டிக்கெட் இல்லாம திரும்பப் போற. ஜோதிகாவோட அடக்கி வாசிச்ச நடிப்பப் பார்க்க நீ கொடுத்து வச்சது அவ்ளோதான்'னு முறுக்கிக்கிச்சு. பாவம், நான் ரிசர்வ் பண்ணினது அவருக்குத் தெரியாது!

உள்ளே போனா, டிக்கெட் கிழிக்கற இடத்துல ரெண்டு காலேஜ் பொண்ணுங்க. "கமலுக்காகவே நான் ரெண்டாவது தடவ பார்க்க வந்திருக்கேண்டி. அலட்டிக்காம அமைதியா நடிச்சிருக்கார். நாளுக்கு நாள் அவரோட அழகு கூடிட்டே போகுது"ன்னு ஒரு கேர்ள் சொல்ல, இன்னொருத்தி "கமலைவிட அவருக்கு ஜோடியா வர கமலினி முகர்ஜி தான் ரொம்ப பாந்தமாயிருக்காங்க. ரெண்டு மூணு சீன்ல வந்தாலும் மனசுல டாவின்சி ஓவியம் மாதிரி பதிஞ்சுடறாங்க'ன்னா."

இன்டர்வெல்ல கேன்டீன்ல செம கூட்டம். ஒருத்தர் ஐஸ் வாங்கக் கை நீட்டிக்கிட்டே "இதுவரைக்கும் படம் திக் திக்னு நகர்ந்திருக்கு. இனிமே எப்படிப் போகப் போகுதோ..."ன்னார். பாப்கார்ன் சாப்பிட்டுக்கிட்டே ஒரு மாமி "'காக்க காக்க' படத்துலேர்ந்து கௌதம் இன்னும் வெளில வரல. இளமாறன், மாயான்னு கேரக்டர்களுக்குப் பேர் வச்சிருக்கறதும், வில்லன்ல ஒருத்தன் 'காக்க காக்க' பட பாண்டியா மாதிரி எப்பப்பாரு 'தூக்குறேண்டா' 'அடிக்கிறேண்டா'ன்னு கத்தறதும் பழைய மொந்தை"ன்னாங்க.

மறுபடி படம் ஆரம்பிச்சது. இருபது நிமிஷத்துக்குப் பிறகு என் வரிசைலேர்ந்து...

**முனகல் 1:** "நல்லா போயிட்டிருந்த படத்துக்கு இன்டர்வெல்லுக்குப் பிறகு என்னாச்சு? போரடிக்குதே...!"

**முனகல் 2:** "இந்தக் கதைய இந்தியா

வுலேயே எடுத்திருக்கலாமே... ஏன் கௌதம் அமெரிக்கா போனார்?"

படம் முடிஞ்சு வெளியே வந்தா, எனக்கு முன்னாடி போன கும்பல்லேர்ந்து கலவையான கமெண்ட்ஸ்:

"ஹாரிஸ் ஜெயராஜோட பின்னணி இசையும் பாடல்களும் கலக்குது மச்சி. கவிதை மாதிரி பாட்டு எழுதியிருக்கறது தாமரைதானே... நினைச்சேன்!"

"ரவிவர்மனை வுட்டுட்டியே... இன்னாமா கேமராவ சுழலவுட்ருக்கார்... இங்கிலீஷ் படம் பார்க்கற மாதிரியே இருக்கு."

கூட்டத்தை நோக்கி மைக்கைப் பிடிச்சிருந்தார் ஒரு பிரபல சேனல் ஆள். ஒரு அம்மா வேகமாப் பேசினாங்க...

"படத்துல நெறைய ஓட்டைங்க. பாதுகாப்புக்குப் பேர் போன அமெரிக்காலேர்ந்து வில்லன்கள் சுலபமா இந்தியாவுக்குத் தப்பிக்கறதும், இங்க உருவத்தை மாத்திக்கிட்டு டிமிக்கி கொடுக்கறதும் கொஞ்சமும் நம்பும்படியா இல்ல. கமல் - ஜோதிகாவுக்கு இடையிலான நட்பையும், மெல்ல மெல்ல அது திருமணத்தை நோக்கிப் பயணிக்கறதையும் இதமாச் சொல்லியிருக்காங்க. பிரகாஷ்ராஜ் பிரமாதமா நடிச்சிருக்கார். திருஷ்டி சுத்திப் போட வேண்டியது எடிட்டர் ஆண்டனிக்குப் [illegible]."

**- லஜ்ஜாவதி**





''ஆபீஸ் நேரத்தில் நீங்க அடிக்கடி வெளியே போய்டறீங்க. உங்களைக் கண்காணிப்பதற்கு ஒரு ஆள் போடணும் போலி ருக்கே?''

''எங்க அண்ணன் சும்மாதான் இருக்கான். அவனுக்கு அந்த வேலையைப் போட்டுக் குடுங்க, சார்!''

- ராதா நரசிம்மன்

''இந்த ஜீன்ஸ் சாயம் போகுமா?''

''நம்பி வாங்கலாம், அழுக்குக்கூட போகாது சார்!''

- அம்பை தேவா





''பாவம், அந்தப் பெண்ணுக் குக்காது கேட்காது போல..''

''ஏன்! என்னாச்சு...?''

''நான் ஐ லவ் யூனு சொன் னால், அது செருப்பு பிஞ் சிடும்னு சொல்லுதே!''

- ஆர்.மணிகண்டன்



"வர வர என் மனைவி என்னை மதிக்கவே மாட்டேங்கறா..."

"அப்போ நீ வராம இருந்து பாரேன்..."

- கே.ஆனந்தன்



# அழக்குக் கூட போகாது!

"மரக்கன்று நடு விழாவில் தலைவர் பக்கத்துல யாருமே நின்னு ஹெல்ப் பண்ண முன் வரலையே?"

"அதுவா? கூடவே இருந்து குழி பறிச்சவர்னு கெட்ட பெயர் வந்துடக் கூடாதே!"

- செந்தில்குமார்

"படத்துக்கு நான் வைக்கப் போற பேரைப் பார்த்து கேளிக்கை வரி போடறவங்க மண்டையைப் பிச்சிக்கப் போறாங்க."

"அப்படி என்ன பேரு வைக்கப்போற?"

"'ஆங்கிலம்'னுதான்."

- வீ.விஷ்ணுகுமார்



## அம்மா!



அம்மா எப்போதுமே இந்த உலகத்தை ஒரு மலர் என்றும் இந்த உலகில் உள்ள பல்வேறு நாடுகளை, அந்த மலரின் இதழ்கள் என்றும் வர்ணிப்பார். 1987ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் அம்மா பல்வேறு உலக நாடுகளுக்கும் விஜயம் செய்கிறார். அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி, ஸ்பெயின், பெல்ஜியம், சுவிட்சர்லாந்து, ஹாலந்து, ருஷ்யா, மொரீஷியஸ், ஆஸ்திரேலியா, சிங்கப்பூர், ஜப்பான் எனப் பல நாடுகள் இதில் அடங்கும். இந்த நாடுகளுக்குப் போகும்போது, அங்குள்ள பல்வேறு நகரங்களுக்கும் சென்று அம்மா தம் பக்தர்களுக்குத் தரிசனம் தருகிறார். தவிர இங்கெல்லாம் சத்சங்கம், பஜனை, தியானப் பயிற்சி, பூஜை ஆகிய அனைத்தும் நடைபெறுவது வழக்கம். அம்மா செல்லும் இடங்களிலெல்லாம் திரண்டு வரும் பக்தர்கள், அம்மாவிடம் ஏராளமான கேள்விகள் கேட்பார்கள். அம்மா, அந்தக் கேள்விகளுக்கெல்லாம் புன்சிரிப்புடன் பதில் அளிப்பார்.

பொதுவாக, அம்மா மலையாளத்தில் உரையாற்ற, அது இந்தியாவானாலும் சரி, அயல் நாடுகளானாலும் சரி... உள்ளூர் மொழியில் மொழிபெயர்க்கப்படும்.

- மௌலி

அந்தக் காலத்தில் குருகுலங்களில் தங்கியிருந்து சீடர்கள் வேதாந்த தத்துவங்களைக் கற்றுக்கொள்வதுடன் நிற்காமல், ஆசிரமம் சம்பந்தப்பட்ட பணிகளிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டார்கள். காடுகளுக்குச் சென்று விறகு சேகரித்துக் கொண்டு வருவது, மாடுகளை மேய்ப்பது போன்ற பணிகளையும் அவர்கள் செய்யத் தயங்கவில்லை.

ஆனால், இன்று உலகில் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன. ஆசிரமங்களும் அதற்கு விதிவிலக்கு அல்ல. உதாரணத்துக்கு அம்மாவின் ஆசிரமத்தையே எடுத்துக் கொள்வோம். இங்கே இன்று ஆயிரக்கணக்கானோர் இருக்கிறார்கள். ஆசிரமத்தின் கிளைகள் இந்திய நாட்டில் மட்டுமின்றி உலகமெங்கும் பரவி இருக்கின்றன. ஏராளமான அயல்நாட்டுப் பிரஜைகள்கூட தங்களை ஆசிரமப் பணிகளில் ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார்கள். உடல் ரீதியாகக் கடினமாக உழைத்து, சேவை புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

அர்ஜுனனிடம் கிருஷ்ணர், "அர்ஜுனா! மூன்று உலகங்களிலும் நான் பெறக்கூடியது ஒன்றுமே இல்லை. இருந்தபோதிலும் நான் என் கடமையைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறேன். என் பணி, பலனை எதிர் பார்க்காத பணி" என்கிறார். ஆசிரமவாசிகள் ஒவ்வொருவரும் இப்படித்தான் பலனை எதிர் பார்க்காமல் இந்த உலகில் சேவை செய்ய வேண்டும் என்று அம்மா விரும்புகிறேன்.

அம்மாவின் ஆசிரமத்தில் டாக்டர்கள் இருக்கிறார்கள்; இன்ஜினீயர்கள் இருக்கிறார்கள்; கம்ப்யூட்டர் வல்லுநர்கள் இருக்கிறார்கள். ஏனைய பல்வேறு துறைகளைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள். அனைவரும் தங்களுக்குத் தெரிந்த வேலையை, அர்ப்பணிப்புடன் செய்கிறார்கள். தியானம், பூஜை ஆகியவற்றிலும் தங்களை ஈடுபடுத்திக் கொள்கிறார்கள். இவர்களில் சன்னியாசம் பெற்றும் அம்மா

# மாதா அமிர்தானந்தமயி

# அதுதான் அம்மா!

வின் பக்தர்களாகவே இருந்துகொண்டு சேவை புரிகிறவர்களும் உண்டு.

அம்மா இங்கே ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். சன்னியாசம் பெறுவது என்பது அத்தனை சுலபமான விஷயமில்லை. எத்தனை பேர் முயன்றாலும், ஒரு சிலருக்கே அது கைவரக்கூடும். எல்லோரும் சன்னியாசியாக வேண்டும் என்று அம்மா சொல்லவில்லை. ஆனால் அப்படி ஒருவர் உண்மையிலேயே விரும்பும்போது, மற்றவர்கள் அதற்குத் தடை சொல்லக்கூடாது.

ஆசிரமப் பணியின்பால் கவரப்பட்டு, அவ்வப்போது பலரும் தங்களை ஆசிரமத்துடன் இணைத்துக்கொள்ள விரும்புவது உண்டு. இந்த உலகத்தில் அன்பும், சேவையும் தேவைப்படும் கோடிக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய அன்பை வழங்கவும், சேவை செய்யவும் தேவைப்படும் மனிதர்களின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. எனவே, சேவை செய்ய விரும்புகிற அனைவருக்கும் ஆசிரமத்தின் கதவுகள் திறந்தே இருக்கும். அப்படி நிறைய பேர் தினமும் வந்துகொண்டுதான் இருக்கிறார்கள்.

அவ்வப்போது, ஆசிரமத்தில் சேர விரும்பும் சில பிள்ளைகளின் பெற்றோர்கள், அம்மாவிடமே வந்து, "அம்மா! என் பிள்ளை எங்கள் விருப்பத்தை மீறி, உங்கள் ஆசிரமத்தில் தங்க விரும்புகிறான். நாங்கள் வீட்டுக்கு அழைத்தால் வர மறுக்கிறான். நீங்கள்தான் அவனுக்குப் புத்திமதி சொல்லி வீட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டும்" என்று முறையிடுவதுண்டு. பிள்ளைகள் வீட்டுக்கு வர முடியாது என்று மறுக்கிறபோது,



"மனைவியின் நகையை அடகு வச்சதில் இரண்டு நன்மையா! என்ன என்ன?"

"சில்லறைக் கடனெல்லாம் தீர்ந்தது! அடகு வச்சிட்ட கோபத்தில் மனைவி பிறந்தகம் போயிட்டாள்!" - உ. ராஜாஜி

பெற்றோர்களுக்கு அம்மா மீது கோபம் வரும். சிலர் அம்மாவைப் பற்றி அவதூறு பேசுவதும் உண்டு. சிலர் போலீசில் புகார் கொடுப்பார்கள்; வழக்குப் போடுவார்கள். தாய், தந்தையின் மனசு, இந்த அம்மாவுக்குப் புரியாதா? ஒரு அம்மாவின் மனசு துடிப்பது கண்டு, இந்த அம்மாவின் மனசும் துடிக்கும். அதுதான் அம்மா!

சில சமயங்களில், இளைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள் தங்களை முழு நேர ஆசிரமப் பணிகளில் ஈடுபடுத்திக் கொள்வதை சில பெற்றோர்கள் விரும்புவதில்லை. அம்மா, அவர்களை மயக்கித் தன்னுடைய கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டிருக்கிறார் என்று குற்றம் சாட்டுவோரும் உண்டு.

அந்தப் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைப் பற்றியும், அவர்களது எதிர்காலத்தைப் பற்றியும் நிறைய கனவுகள் கொண்டிருப்பார்கள். எனவே குழந்தைகள், ஆசிரமத்துக்கு வந்து விடுவதை பெற்றோர்களால் ஜீரணித்துக் கொள்ள முடியாது என்பது அம்மாவுக்குப் புரிகிறது. அந்தச் சமயங்களில் ஆசிரமத்தில் சேர விரும்புபவர்களிடம், 'உன்னுடைய பெற்றோரின் விருப்பத்தை மீறி நீ ஆசிரமத்தில் சேரத்தான் வேண்டுமா? உன்னைப் பிரிந்து உன் பெற்றோர் வாடுவதில் உனக்குச் சம்மதமா?' என்றெல்லாம் அம்மா கேட்பதுண்டு. சில சமயங்களில், பெற்றோர்களின் சம்மதக் கடிதம் கொண்டு வந்தால்தான், ஆசிரமத்தில் சேரலாம் என்றும் அம்மா சொன்னதுண்டு.

ஆனால், இந்தக் காலத்துப் பிள்ளைகள் ரொம்பத் தெளிவாக இருக்கிறார்கள். ஆழ்ந்து சிந்தித்து முடிவுகள் எடுக்கிறார்கள்; தாங்கள் எடுக்கும் முடிவில் தீர்மானமாகவும் இருக்கிறார்கள். எனவே பெற்றோர்களிடம், "உங்கள் பிள்ளையிடம் நிதானமாகப் பேசிப் பாருங்கள். உங்கள் தரப்பு விஷயங்களை விளக்கிச் சொல்லுங்கள். அவர்கள் மனத்தை மாற்றி அழைத்துச் செல்ல முடியுமா என்று பாருங்கள்" என்று சொல்வேன். அதையும் மீறி, அவர்கள் ஆசிரமப் பணியில் தங்களை ஈடுபடுத்திக்கொள்ள விரும்புகிறார்கள் என்றால், அவர்கள் விருப்பத்தை, லட்சியத்தை நீங்கள் புரிந்து கொள்ளுங்கள். அவர்களை ஆசிர்வதித்து, இந்தச் சமூகத்துக்கு அளியுங்கள்.

அம்மாவால் எப்படி எந்தப் பெற்றோரையும் தங்கள் பிள்ளையை ஆசிரமத்துக்கு அனுப்பும்படியோ, விருப்பமில்லாத ஒருவரை ஆசிரமத்தில்தான் தங்கி இருக்க வேண்டும் என்றோ கட்டாயப்படுத்த முடியாதோ, அதேபோல ஆசிரமத்தில் சேர விரும்பும் ஒருவருக்கு அனுமதி மறுக்கவும் முடியாது. சுயநலம் மிகுந்தவர்கள் பெருகிவிட்ட இன்று, தன்னலமின்றி, முழுமையான ஈடுபாட்டுடன் சேவை செய்ய முன்வருபவர்களை 'வேண்டாம்' என்று சொல்லித் திருப்பி அனுப்ப அம்மாவுக்கு எப்படி மனம் வரும்?

இன்று ஆசிரமத்தில் சேரும் ஒரு பிள்ளை, எதிர்காலத்தில் பலரையும் காப்பவனாக இருப்பான். பெற்றோர்களுக்காகத் தன் வாழ்வைத் தியாகம் செய்வதைவிட, தன் வாழ்நாளையே இந்த உலகத்துக்காக அர்ப்பணம் செய்வது எவ்வளவு உயர்ந்த செயல்! அவர்கள் செய்யும் சேவைக்குண்டான புண்ணியம், அவர்களுக்கு மட்டுமின்றி, அவர்கள் பெற்றோருக்கும், மற்றவர்களுக்கும்கூட போய்ச் சேரும் என்று நம் புராணங்கள் கூறுகின்றன.

(அடுத்த இதழில் முடிக்கிறேன்...)

# ட்ரீட்மென்ட் புதுசு!

**பெ**ங்களூர் பொறியியல் கல்லூரி ஒன்றில் 'மருத்துவ மின்னணுவியல்' (Medical Electronics) பாடத்தில் பி.ஈ. முடிந்த விஜய் ஆனந்த், மேற் படிப்புக்காக அமெரிக்க ட்யூக் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து, பச்சிளம் குழந்தைகளைத் தாக்கும் மஞ்சள் காமாலை நோயைக் குணப்படுத்தும் கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார். முன்பு இந்தக் கருவியின் விலை 4000 டாலர்கள். ஆனால், இவர் வடிவமைத்துள்ள கருவியின் விலை 500 டாலர்தான். இக் கண்டுபிடிப்புக்காக ட்யூக் பல்கலைக்கழகம் அவருக்கு ஒரு லட்சம் டாலர் பரிசளித்திருக்கிறது. இனி இக்கருவியை வளர்ந்து வரும் நாடுகளும் வாங்க முடியும்.

* விஜய் ஆனந்த்



# கலக்கறே... சார்லி!

**பெ**ங்களூரின் 'ஹெப்பல்' பகுதியில் விமானப் படையினர் மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்காகப் பள்ளி ஒன்றினை நடத்துகிறார்கள். இந்தக் குழந்தைகளுடன் 'சார்லி' என்ற இரண்டரை வயது நாயினை விளையாடப் பழக்கியிருக்கிறார்கள். கிள்ளுவது, முத்தமிடுவது, அணைத்துக்கொள்வது என்று அவர்களுடன் சார்லியும் சந்தோஷமாக விளையாடுகிறது. இந்த விளையாட்டால் குழந்தைகள் மனநிலையில் நல்ல மாற்றமும், முன்னேற்றமும் தெரிகின்றனவாம்! இந்தப் பிராணி சிகிச்சை உலகத்தின் பல பாகங்களில் பிரபலம்!



**'நெ**கட்டிவ்' வகை ரத்தம் அரிதானது. இது கிடைக்காமல் நோயாளிகளும், விபத்தில் சிக்குண்டவர்களும் இறந்துவிட நேர்வதுண்டு. இதனைக் கருத்தில் கொண்டு பெங்களூர் மாதர் சங்கத்தைச் சேர்ந்த திருமதி மோனிகா ராஜாராம், 'நெகட்டிவ்' இரத்த வகை கொண்டவர்களின் விவரங்கள் அடங்கிய ஒரு டைரக்டரியை 2002-ல் வெளியிட்டார். கணினி வெப்சைட்டுகள் மூலம் இந்த டைரக்டரியை தேசிய அளவில் தொகுத்து விட்டார்களாம். இதன் வலை முகவரி : www.negativegroups.com, www.negativegroups.org

- அனிதா ராமச்சந்திரன்

இதுவரை...

**பா**மாவும் ஷ்யாமும் நெருக்கமாகப் பழகி வருவது பற்றி சுஜாவைத் தொடர்ந்து ஜானவி பாட்டியும் ராதாவிடம் போட்டுக் கொடுக்கிறாள். ஊர் பேசும் பேச்சுக்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டுமெனில், பாமாவுக்கு உடனடியாகக் கல்யாணத்தை முடிக்க வேண்டுமென ராதா முடிவு செய்கிறாள்; பாமாவும் அதற்குச் சம்மதிக்கிறாள். தனக்கு வரன் பார்க்கும் பொறுப்பையும் ராதாவிடமே தரும் பாமா, மாப்பிள்ளை ஷ்யாம்போல இருக்க வேண்டும் என்று கண்டிஷன் போடுகிறாள். பாமாவின் கல்யாண வேலைகளில் ராதா பரபரப்பாக இறங்க, ஷ்யாம் எரிச்சலடைகிறான். அந்த முயற்சியைக் கைவிடுமாறு ராதாவிடம் பேசிப் பார்க்கிறான். ஆனால் ராதா, அவனையும் கல்யாண வேலையில் இழுக்கிறாள்.

அருண், கவிதாவை வேலைக்கு அனுப்பி வைக்கிறான். அருணின் மகன் அடிபட்டு இலேசான காயத்துடன் வர, அவனை அருண் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்கிறான். ஆஸ்பத்திரியில் அருணைப் பார்த்த கீதா, தனது அறைக்கு அழைத்துச் சென்று ஓர் அசைன்மென்ட் கொடுக்கிறாள். அது அஸ்வினியை சென்னையை விட்டு விரட்டுவது.

அருண் அதற்கான காரணத்தைக் கீதாவிடம் இலாகவமாகக் கேட்க, கார்த்திக் தனது பிள்ளை இல்லையென்ற விவரத்தைச் சொல்லி விடுகிறாள். அருணும் தனக்குக் கிடைத்த புது வேலையில் சுறுசுறுப்பாக ஈடுபடுகிறான்.

கீதா சொன்ன ஏரியாவில் அருண் அஸ்வினியைத் தேடிக் கண்டுபிடித்துவிட, அவளைத் தனது செல்போன் வாயிலாக அவளுக்கே தெரியாமல் போட்டோ எடுக்கிறான். அதை அடியாட்களிடம் கொடுக்கிறான். அந்த வேலைக்காக கீதா அவனிடம் கொடுத்த பணத்தில், பாதியை எடுத்துக்கொண்டு, மீதியை அடியாட்களுக்குத் தந்து ஏமாற்றுகிறான்.

தயாளன் போட்டோவை யாமினி வேண்டுமென்றே போட்டு மிதித்து உடைக்கிறாள். ஆனால், தயாளனிடமும் ஆனந்திடமும் தானாக போட்டோ விழுந்து உடைந்ததாக நாடகமாடுகிறாள். பூங்கொடி அதைக் கண்டுபிடித்து விடுகிறாள்.



# மிரட்டும் பாமா... விரட்டும் மாதவன்..!

இனி...

**ரா**தாவின் மெடிக்கல் ரிப்போர்ட்

டின் முடிவு வருகிறது. அதில் அவளுக்கு குழந்தை பெறும் வாய்ப்பு அறவே இல்லையென்று டாக்டர் மூலமாகத் தெரிய வர, அனைவரும் அதிர்கிறார்கள். ஆனந்தாயி அதையே சாக்காக எடுத்துக் கொண்டு ஷ்யாமுக்கு வேறு கல்யாணம் செய்து வைக்கத் திட்டமிடுகிறாள்.

பாமாவும் வக்கீலிடம் ராதா - ஷ்யாம் விவாகரத்து பற்றி மறைமுகமாக விசாரிக்கிறாள். இருவரும் ஒத்த மனதோடு விவாகரத்து செய்வதற்கான விண்ணப்பத்தை ஷ்யாமிடம் தந்து, அதில் ராதாவின் கையெழுத்தை வாங்குமாறு அவனை நிர்ப்பந்திக்கிறாள். ஷ்யாம், ராதாவிடம் மாற்றுமாறு அட்வைஸ் செய்கிறாள். யாமினி அந்த அட்வைஸை ஏற்றுக் கொண்டாளா?

இதற்கிடையே தேஜாவின் மீது கண் வைக்கும் மாதவன், தவறான நோக்கத்தோடு அவளிடம் யோகா கற்றுக் கொள்கிறான். மாதவனால் விரட்டப்பட்ட மகேஷ், மறுபடியும் தேஜாவை வேறு வழியில் மடக்க முயல்கிறான். மகேஷ் அந்த முயற்சியில் வெற்றி பெற்றானா?

தயாளன் வீட்டோடு இருக்கும் பூங்கொடியைத் தேடி, அவளது உறவினர்கள் வருகிறார்கள். அவளுக்கும் ஆனந்துக்கும் திருமணம் செய்து வைக்கலாம் என்று வற்புறுத்துகிறார்கள். தயாளன் அதற்கு ஒப்புக் கொண்டாரா? அதற்கு யாமினியின் ரியாக்ஷன் என்ன?

பதில்கள் இந்த வார எபிசோடுகளில்...

'கண்ணாடி கதவுகள்' தொடரை விஜய் டீ.வியில் பார்த்துவிட்டுத் தகுந்த விமர்சனங்களை எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அதிர்ஷ்டசாலி நேயருக்





கையெழுத்து வாங்கினானா? ராதா விவாகரத்துக்குச் சம்மதித்தாளா?

கல்பனாவின் மூலமாக ஆனந்த் மற்றும் அவன் குடும்பத்தைப் பற்றியும், அவர்களுக்கு இருக்கும் பிரச்னைகள் பற்றியும் அறிந்துகொள்கிறாள் தேஜா. பின்னர் தயாளன் வீட்டுக்குச் சென்று பூங்கொடியை நட்பாக்கிக் கொள்கிறாள். யாமினியின் விதவைக் கோலத்தை

குத் தங்க நாணயம் பரிசாகக் காத்திருக்கிறது! கல்கியில் வெளியாகும் கூப்பனை விமர்சனக் கடிதத்துடன் இணைத்து அனுப்புங்கள்.

கண்ணாடி கதவுகள்,
விஜய் டீ.வி,
அஞ்சல் பெட்டி எண் : 8484,
சென்னை - 600 034



# தனிச்சிறப்பு...

நவீன சீர்திருத்தக்காரர்களும் போற்றும் விவேகானந்தர் போன்றோரும், அன்னி பெசன்ட் போன்ற மேல்நாட்டு நல்லறிஞர் களுங்கூட இந்தியாவின் உயிர்நிலையே மதத்தை மையமாகக் கொண்ட அதன் ஆன் மிகந்தான் என்றே வலியுறுத்தியிருக்கின் றனர். அதனை மறந்து, மற்ற துறைகளில் இந்நாடு எத்தனை முன்னேற்றம் கண்டா லும் அது உயிரிழந்த சவத்துக்குச் செய்யும் அலங்காரமாகத்தானிருக்கும் எனச் சுட்டிக் காட்டியுள்ளனர். ஹிந்து மதம் எனப்படும் சநாதன தர்மத்தினால் அவர்களுக்கு ஆன் மிக வியலை மதாசரணைகளாகவும், தத்துவக் கோட்பாடுகளாகவும் கொடுத்து, அவர்களது உலக வாழ்வு சம்பந்தப்பட்ட அனைத்தை யும்கூட ஈசனை மையம்கொண்ட சடங்கு களாகப் புனிதப்படுத்தியளித்து, உலகி யலுமே ஆன்மவியலுக்கு உபாயமாகுமாறு உயர்த்திச் சிறப்புச் செய்து ஆதி காலத் திலிருந்து உலக நாடுகளிடையில் தனிச் சிறப்புப் பெற்றது நமது பாரத நாடு. மத வியலின், தர்மம், தெய்வ பக்தி, ஆத்ம சிந் தனை என்னும் மூன்று அங்கங்களில் ஒன் றான தர்மம் என்பதை விரித்துக்கூறும் சநாதன தர்மசாத்திரங்கள், ஒரு மானுடன் செய்யக் கூடிய சகல காரியங் களுமே ஆன்ம நலனுக்குப் பயனாகும்படியாக அவை ஒவ்வொன் றுக்கும் விதி வகுத் துக் கொடுத்துள்ளன. நல்லொழுக்கமாம் அத் தர்மம் ஈசனைச் சுற்றியே படர்ந்திருப்ப தாகவும் ஆக்கிக் கொடுத்திருக்கிறது. இவ் வழி முறைகளையே இந்நாட்டு மக்கள் பூர்வ காலத்திலிருந்து பற்றியொழுகி வந்திருப் பதால்தான் பிற நாடுகளின் மேன் மக்களும் ஒப்புக்கொண்டு பாராட்டுமாறு இந் நாட் டிலேயே அதிக பக்ஷமாக மஹான்களும் மத நூல்களும் தத்துவ சாஸ்திரங்களும் தோன்றி, பிற நாடுகளின் பூர்வகாலப் பெரியோர் களும் அவற்றிலிருந்து ஆன்மிக உயர்வு கண்டு வந்திருக்கின்றனர்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

மகாராஜாவின் புலிவேட்டை விரதம் நன்கு நிறைவேறி வந்தது. பத்து வருஷ காலத்தில் எழுபது புலிகள் வரையில் வேட்டையாடிக் கொன்றுவிட்டார். அதற்குப் பிறகு ஒரு பெரிய இடையூறு ஏற்பட்டது. பிரதிபந்தபுரம் காடுகளில் புலிகளே அற்றுப்போய் விட்டனபோல் தோன்றியது. புலிகள் ஒருவேளை கருத் தடை முறைகளைக் கையாண்டனவோ அல்லது 'ஹரிகரி' செய்துகொண்டனவோ அல்லது வெள்ளைக்காரர்களின் கையினால்தான் சாக வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டு நாட்டைவிட்டு ஓடிப் போயினவோ, தெரியவில்லை.

மகாராஜா ஒரு நாள் திவானைக் கூப்பிட்டார். "திவான் சாகிப், இன்னும் முப்பது புலி இந்தத் துப்பாக்கிக்கு இரையாகித் தீரவேண்டுமென்று உமக்குத் தெரியுமோ, இல்லையோ?" என்று கேட்டார்.

திவான் துப்பாக்கியைப் பார்த்து நடுநடுங்கிக்கொண்டே, "மகாராஜா! நான் புலியில்லை..." என்றார்.

"நீர் புலி என்று எந்த முட்டாள் சொன்னது?"

"இல்லை, நான் துப்பாக்கி இல்லை" என்றார் திவான்.

"நீர் புலியுமில்லை; துப்பாக்கியுமில்லை. திவான் சாகிப்! உம்மைக் கூப்பிட காரணம் வேறு. நான் கல்யாணம் செய்துகொள்வதென்று தீர்மானித்து விட்டேன்" என்றார் மகாராஜா.

திவானுக்கு உளறல் இன்னும் அதிகமாகிவிட்டது. "மகாராஜா! ஏற்கெனவே எனக்கு இரண்டு மனைவிகள் இருக்கிறார்கள்; உங்களையும் கல்யாணம் செய்துகொண்டு..."

"சட், என்னங்காணும் உளறுகிறீர்? உம்மை எதற்காக நான் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறேன்? எனக்கு வேண்டியது புலி..."

"மகாராஜா! வேண்டாம், யோசனை செய்யுங்கள். உங்கள் குலத்து முன்னோர்கள் கத்தியைக் கல்யாணம் செய்து கொண்டார்கள். நீங்கள் வேணுமானால் துப்பாக்கியைக் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். இந்த சமஸ்தானத்துக்குப் புலி ராஜா இருப்பது போதும்; புலி ராணி வேறு வேண்டாம்!"



# புலி ராஜா

இதைக் கேட்ட மகாராஜா குபீரென்று சிரித்துவிட்டு, "புலியுமில்லை, துப்பாக்கியுமில்லை. மனுஷப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறேன். தற்சமயம் எந்தெந்த சமஸ்தானத்தில் புலி இருக்கிறதென்று முதலில் கணக்குத் தயார்

பாகம்-2

அமரர் கல்கி

செய்யும். பிறகு, புலி இருக்கிற சமஸ்தானத்தில் ராஜவம்சத்தில் கல்யாணத்துக்குப் பெண் இருக்கிறதா என்று பாரும்" என்றார்.

திவான் அப்படியே பார்த்தார். கடைசியில் மகாராஜாவின் விருப்பத்தின்படியே புலிகள் நிறைய உள்ள சமஸ்தானத்தில் பெண் பார்த்துக் கல்யாணமும் செய்து வைத்தார்.

மகாராஜா ஜங்ஜங் பகதூர் ஒவ்வொரு தடவை மாமனார் வீடு சென்றபோதும், ஐந்தாறு புலிகளைக் கொன்று எல்லாப் புலிகளின் தோலும் - சரியாக 99 தோல்... அரண்மனை ஆஸ்தான மண்டபத்தின் சுவர்களை அலங்கரித்தன.



கடைசியில் நூற்றுக்கு இன்னும் ஒரு புலிதான் பாக்கி என்ற நிலைமை ஏற்பட்டதும் மகாராஜாவின் பரபரப்பு மிகவும் அதிகமாயிற்று. பகலில் அதே நினைவு; இரவில் அதே கனவு. இதற்குள்ளே, மாமனார் சமஸ்தானத்திலும் புலிப் பண்ணை வறண்டு போய் விட்டபடியால் புலிகள் அகப்படுவது மிகவும் பிரயாசையாய்ப் போயிருந்தது. ஆனாலும், இன்னும் ஒன்றே ஒன்றுதானே? இன்னும் ஒரு புலியை மட்டும் கொன்றுவிட்டால், அப்புறம் பயமே இல்லை. புலி வேட்டையையே விட்டுவிடலாம்.

ஆனால், இந்தக் கடைசிப் புலி விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். காலஞ்சென்ற தலைமை ஜோசியர் என்ன சொன்னார்? 99 புலிகளை மகாராஜா கொன்றபோதிலும் நூறாவது புலி விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்! உண்மைதான். புலி பொல்லாத மிருகம்; ஜாக்கிரதையாகத்தான் இருக்க வேண்டும். ஆனால், அந்த நூறாவது புலிக்கு எங்கே போகிறது? புலி கிடைப்பது புலிப்பால் கிடைப்பதைவிடக் கஷ்டமாகிவிட்டதே?

மகாராஜா இப்படிப்பட்ட கவலையில் ஆழ்ந்திருந்தபோது, அந்தக் கவலையைப் போக்கக்கூடிய ஓர் அருமையான சந்தோஷச் செய்தி வந்தது. அந்த சமஸ்தானத்திலேயே மலைக் கிராமம் ஒன்றில், திடீர் திடீரென்று சில ஆடுகள் காணாமல் போய்வந்தன. 'முழு ஆடு விழுங்கிகள்' என்று பெயர் பெற்ற காதர் மியான் சாகிபுவையும், வீராசாமி நாயக்கரையும் விசாரித்து, அவர்கள் பொறுப்பாளிகள் அல்லர் என்று தெரிய வந்தது. புலிதான் வந்திருக்க வேண்டுமென்று நிச்சயமாயிற்று. கிராமவாசிகள் ஓடிப்போய் மகாராஜாவிடம் தெரிவித்தார்கள். அந்தக் கிராமத்துக்கு மூன்று வருஷம் வரி, வாய்தா குவிட்ரெண்ட், ஜமாபந்தி, புறம்போக்குப் பட்டி ஒன்றுமே கிடையாது என்று மகாராஜா தெரிவித்துவிட்டு, உடனே வேட்டைக்குக் கிளம்பினார்.

புலி இலேசில் அகப்படவில்லை.



வேண்டுமென்று மகாராஜா கையில் அகப்படக்கூடாதென்றே அது ஒளிந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது. மகாராஜாவோ, புலி அகப்பட்டாலொழிய காட்டைவிட்டு வரமாட்டேனென்று பிடிவாதம் பிடித்தார். அதோடு, நாளாக ஆக மகாராஜாவின் கோபமும் பிடிவாதமும் அதிகமாகி வந்தன. அதன் பயனாய் அனேக உத்தியோகஸ்தர்களுக்கு வேலை போய்விட்டது!

ஒரு நாள் ரொம்பக் கோபம் வந்த போது, மகாராஜா திவானைக் கூப்பிட்டு, "சமஸ்தானத்தில் நிலவரியை உடனே இரண்டு பங்கு செய்யுங்கள்" என்றார். திவான், "பிரஜைகளுக்கு அதிருப்தி உண்டாகும், மகாராஜா! அப்புறம் நம் சமஸ்தானத்திலும் ஸ்டேட் காங்கிரஸ் ஏற்பட்டுவிடும்" என்றார். "அப்படியானால், உம்முடைய வேலையை ராஜினாமா செய்துவிட்டுப்போம்!" என்றார் மகாராஜா.

இதற்குமேல் மகாராஜாவுக்குப் புலி அகப்படாதிருந்தால் விபரீதம் தான் என்று தீர்மானித்துக் கொண்டு வீட்டுக்குப் போனார் திவான். அங்கே சென்னை பீப்பிள்ஸ் பார்க்கிலிருந்து வாங்கிக் கொண்டுபோய் இரகசியமாய் வைத்திருந்த புலியைப் பார்த்ததும்தான் அவருக்கு உயிர் வந்தது.

அன்று இரவு நடுநிசியில் ஊரெல்லாம் அடங்கிய பிறகு, திவானும் அவருடைய வயது முதிர்ந்த மனைவியும் மேற்படி புலியை இழுத்துக்கொண்டு வந்து மோட்டாரில் ஏற்றினார்கள். 'திவான்' தாமே மோட்டாரை ஓட்டிக்கொண்டு போய், மகாராஜா வேட்டையாடிக் கொண்டிருந்த காட்டுக்குப் பக்கத்தில் புலியை இறக்கினார்! மோட்டாரிலிருந்து இறங்க மாட்டேனென்று சத்தியா கிரகம் செய்த அந்தப் புலியைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளுவதற்குள் திவானுக்கு மேல் மூச்சு வாங்கிவிட்டது.

மறுநாள் மகாராஜாவின் முன்னால் மேற்படி கிழப்புலியானது வந்து, "எஜமானே! என்ன ஆக்ஞை?" என்று கேட்பதுபோல் நின்றது. மகாராஜா அளவிறந்த உற்சாகத்துடன் துப்பாக்கியை எடுத்துக் குறிவைத்துச் சுட்டார். உடனே புலி சுருண்டு விழுந்தது.

"நூறாவது புலியைக் கொன்று விட்டோம்; விரதம் நிறைவேறிவிட்டது!" என்ற மகத்தான குதூகலம் மகாராஜாவின் மனதில் தோன்றிற்று. அந்த நூறாவது புலியை, தமது தலைநகரில் ஊர்வலமாகக் கொண்டு வரும்படி கட்டளையிட்டு விட்டு, மகாராஜா மோட்டாரில் ஏறி விரைந்து முன்னால் சென்றார்.

அவர் போன பிறகு, மற்ற வேட்டைக்காரர்கள் புலியின் அருகில் சென்று பார்த்தார்கள். புலியும் கண்களைப் பேந்தப் பேந்த விழித்து அவர்களைப் பார்த்தது! புலி சாககவில்லையென்றும், அதன்மேல் குண்டே பாயவில்லையென்றும் அவர்கள்



"பார்க்க நல்லாத்தானே இருக்கே, அப்புறம் ஏன் பிச்சை எடுக்கற?"

"இன்னைக்கு நல்லா இருக்கேன், நாளைக்கு உடம்பு முடியாம படுத்தா யாரும்மா எனக்கு உதவுவாங்க, அதான்..."

– வி. ஸ்ரீவித்யா

கண்டார்கள். குண்டு சமீபத்தில் போன அதிர்ச்சியினாலேயே அது அப்படி மூர்ச்சையாகி விழுந்திருந்தது. வேட்டைக்காரர்கள் யோசனை செய்தார்கள். குண்டு தவறிப்போன செய்தி மகாராஜாவுக்குத் தெரியக்கூடாது. தெரிந்தால் தங்களுடைய உத்தியோகத்துக்கு ஆபத்து என்று அவர்கள் தீர்மானித்தார்கள். அவர்களில் ஒருவன் புலிக்கு ஓர் அடி தூரத்திலிருந்து குறி தவறாமல் சுட்டு, அதைக் கொன்று தீர்த்தான்.

பிறகு, மகாராஜாவின் கட்டளையின் படி அந்தச் செத்த புலியை நகரில் ஊர்வலம் விட்டுக்கொண்டு போய்க் கடைசியில் அதைப் புதைத்து, சமாதியும் எழுப்பினார்கள்.

மேற்கூறிய விசேஷ சம்பவம் நடந்து சில தினங்களுக்குப் பிறகு மகாராஜாவின் குமாரனுக்கு மூன்றாவது பிறந்ததினக் கொண்டாட்டம் நடந்தது. இதுவரையில் புலி வேட்டையிலேயே கவனமாயிருந்த மகாராஜா, பட்டத்து இளவரசனைப் பற்றிக் கொஞ்சமும் கவனிக்கவில்லை. இப்போது அவருடைய கவனம் குழந்தையின்மீது சென்றது. பிறந்த தினத்தன்று குழந்தைக்கு ஏதாவது பரிசு கொடுக்க வேண்டுமென்று ஆசைப்பட்டார். பிரதி பந்தபுரம் கடைத்தெருவுக்குப் போனார். கடை கடையாகத் தேடியும் அவருக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு பொம்மைக் கடையில் ஒரு சின்ன மரப் புலியைப் பார்த்தார். "இதுதான் சரியான பரிசு!" என்று உடனே தீர்மானித்துவிட்டார்.

அந்த மரப்புலியின் விலை இரண்டே கால்ணாதான். ஆனால், மகாராஜா கேட்கும்போது அவ்வளவு குறைந்த விலை சொன்னால் நிச்சயம் அவசரச் சட்டத்தின் கீழ் தண்டனை கிடைக்குமென்று தெரிந்த கடைக்காரன் "மகாராஜா! இது ரொம்ப ரொம்பக் கலைத் திறமை பொருந்திய பொம்மை; விலை முந்நூறு ரூபாய்தான்!" என்றான்.

"ரொம்ப சந்தோஷம்! யுவராஜாவின் பிறந்ததினக் கொண்டாட்டத்துக்கு இது உன்னுடைய காணிக்கையாயிருக்கட்டும்' என்று சொல்லிவிட்டு, மகாராஜா அதை எடுத்துச் சென்றார்.

யுவராஜாவின் பிறந்த தினத்தன்று, தகப்பனாரும் குழந்தையும் அந்தச் சின்னஞ்சிறு மரப்புலியை வைத்துக் கொண்டு விளையாடினார்கள். யாரோ பட்டிக்காட்டுத் தச்சன் செய்த பொம்மை அது. ஆகையால் அதன் மேலெல்லாம் சிலாம்பு சிலாம்பாய் நின்றது. மகாராஜா அதைக் கையில் வைத்துக்கொண்டு விளையாடியபோது வலக் கையில் ஒரு சிலாம்பு குத்தியது. இடக் கையால் சிலாம்பைத் தட்டி எறிந்துவிட்டு மகாராஜா மேலும் விளையாடிக் கொண்டிருந்தார்.

சிலாம்பு குத்திய இடத்தில் மறுநாள் சின்னக் கொப்புளம் புறப்பட்டது.

இரண்டு நாளில் அது பெரிய சிரங்காயிற்று. நாலு நாளைக்கெல்லாம் கை முழுவதும் புரையேறிவிட்டது.

சென்னைப் பட்டணத்திலிருந்து பெரிய ஸர்ஜன்கள் மூன்று பேர் வரவழைக்கப்பட்டார்கள்.

அவர்கள் கூடி ஆலோசித்து, "ஆபரேஷன் செய்ய வேண்டியதுதான்!" என்று தீர்மானித்தார்கள்.

ஆபரேஷன் நடந்தது.

மூன்று ஸர்ஜன்களும் ஆபரேஷன் செய்துவிட்டு வெளியில் வந்து பின்வரும் செய்தியைத் தெரிவித்தார்கள்.

"ஆபரேஷன் வெற்றிகரமாய் நடந்தது; மகாராஜா காலமாகிவிட்டார்!"

இவ்விதமாக நூறாவது புலியானது கடைசியில் புலி ராஜாவின் மேல் வஞ்சம் தீர்த்துக்கொண்டது.

*(அடுத்த இதழில் 'மாஸ்டர் மெதுவடை...!')*

தலைநகர இளைஞர்கள்கிட்ட எத்தனையோ மயக்கங்கள். சமீபகாலமா 'இன்டர்நெட் அடிக்ஷன்' அதிகமாகிக் கொண்டே வருது. இந்தியாவில் இன்டர்நெட்டை அதிகமாகப் பயன்படுத்தும் 80 மில்லியன் மக்களில், 12 வயது முதல் 25 வயது நிரம்பியவர்களே அதிகமாக இருக்கிறார்கள் என்பது காதுக்குத் தேனில்லை, தேள். சீனாவில் இன்டர்நெட்டே கதி என்றிருந்தவர்களுக்கு அறிவுரைகளை அள்ளி வழங்கிய பின்னர் கொஞ்சம் மாற்றம் ஏற்பட்டிருக்கிறதாம். நம்மூர்ல அட்வைஸ் பண்ணா கேப்பாங்களா?



இன்டர்நெட்டில் செலவழிக்கும் நேரம்போக, டெல்லி இளைஞர்கள் அதிகம் உலா வருவது ஜிம்களில்தான். ஜிம்முக்குப் போறது நல்ல விஷயம் தானேன்னு அவசரப்பட்டுப் பாராட்டாதீங்க. உடற்பயிற்சி செய்யாமலேயே பாடியை பில்ட் பண்ண, ஜிம்களில் ஸ்டீராய்டுகள் விற்கிறார்களாம். இதன் பக்க விளைவுகள் பற்றிக் கவலைப்படாமல், இளைஞர்கள் இதனை அதிக விலை கொடுத்து வாங்குகிறார்களாம். ம்... நாகரிக மோகம் எப்படியெல்லாம் ஆட்டுவிக்குது பாருங்க!

# பென்ஷன் டென்ஷன்!

நம் அரசாங்கம் சுதந்திரப் போராட்ட வீரர்களுக்குத் தியாகிகள் பென்ஷன் வழங்கிக் கௌரவப்படுத்துவது நாமெல்லாம் அறிந்த விஷயம்தான். ஆனா இதைத் தவறாகப் பயன்படுத்திப் பென்ஷன் வாங்குறவங்க கதை இப்போ தலைநகர்ல அம்பலமாகியிருக்கு. கிட்டத்தட்ட 36,000 நபர்கள் மேல புகார் வந்திருக்காம். இவங்க எல்லாம் 1947-ஆம் வருஷம் குழந்தையா இருந்தவங்க என்பது தான் புகாரோட ஹைலைட்டே! மேற்கு வங்கத்தில் 22,479 பேர்களுக்கும் ஆந்திராவில் 14,572 பேர்களுக்கும் மஹாராஷ்டிராவில் 17,581 பேர்களுக்கும் பீஹார் மற்றும் ஜார்கண்டில் 24,870 பேர்களுக்கும் உத்தரப்பிரதேசத்தில் 17,990 பேர்களுக்கும் கர்நாடகாவில் 10,082 பேர்களுக்கும் வழங்கப்படுகிறதாம். இவங்கள்ள எத்தன பேர் உண்மையான தியாகிகள்ன்னு கண்டுபிடிக்கிறது அந்தந்த மாநிலத்தோட பொறுப்புன்னு மத்திய அரசு அதிகாரிகள் சொல்றாங்க.

**- நளினி சம்பத்குமார்**

தமது படங்களைப் போலவே எளிமையானவர் இயக்குநர் விக்ரமன். 'சென்னைக் காதல்' வெளிப்புறப் படப்பிடிப்புக்குச் செல்ல ஆயத்தமாக இருந்தவரிடம் பேசினோம்.

'அது என்ன 'சென்னைக் காதல்?' நகரத்தின் இயந்திரத்தனத்தைப் பிரதிபலிக்கும் அவசரக் காதலா?' என்றால் மறுக்கிறார்.

"இது நகரத்தில் நடக்கும் யதார்த்தமான காதல் கதை. 'சென்னை'ன்னு டைட்டில் கிடைக்காததால் சென்னைக் காதலாகிவிட்டது. என்னோட முந்தைய படங்களின் சாயல் இல்லாமல் வித்தியாசமான விக்ரமன் படமா இருக்கும்" என்றவரிடம் 'பரத் - ஜெனிலியாவை எப்படித் தேர்வு செய்தீர்கள்?' என்றோம்.

# "உறவுகளைக் கொச்சைப்படுத்தாதீர்கள்!"



• விக்ரமன்

"இந்தப் படத்துக்கு ஒரு மென்மையான ஹீரோ தேவைப்பட்டார். பரத் பொருத்தமாத் தெரிஞ்சார். செலக்ட் பண்ணிட்டோம். ஜெனிலியா ஈடுபாடுள்ள, பிரச்னை தராத நடிகை."

'இது ஆக்ஷன் பட சீசன் என்பதால் நீங்களும் முரட்டுத்தன ஹீரோ, அடிதடி என்று கட்சி மாறிவிட்டீர்களா?'

"இதில் மூணு சண்டை இருக்கு. ஆனா ஆக்ஷன் படமில்ல. முழுக்க முழுக்கக் காதல் படம். ஆக்ஷன் படம் அப்பப்போ வரலாம். ஆனால் தொடர்ந்து பல படங்கள் வர்றதால போரடிக்கிற மாதிரி இருக்கும். என்னை இந்த ஆக்ஷன் படப்பட்டியல்ல சேர்க்காதீங்க" என்று கையெடுத்துக் கும்பிடுகிறார்.

'முதல் படத்துக்கும் அடுத்த படத்துக்கும் இடையில் ரொம்பவே இடைவெளி விட்டுவிடுகிறீர்களே ஏன்?'

"நான் பட எண்ணிக்கையைப் பெரிசா நினைக்கிறது இல்ல. திருப்தியான கதை அமையற வரைக்கும் காத்திருப்பேன். ஆனாலும் 'ப்ரியமான தோழி'க்குப் பின் ரெண்டு வருஷம்ங்கிறது அதிகம்தான். இப்படி இடைவெளி எடுத்துக்கக்கூடாதுங்கிற பாடத்தை இப்போ கத்துக்கிட்டேன்!"

தெலுங்கு அனுபவத்தைப் பற்றிப் பேசும்போது விக்ரமன் முகத்தில் மின்னல்!

"ரெண்டு படம் பண்ணினேன். 'ப்ரியமான தோழி'யை 'வசந்தம்'னும், 'உன்னை நினைத்து' படத்தை 'செப்பவே சிறுகாலி'ன்னும் செய்தேன். எந்த வேறுபாடும் தெரியல. தமிழைவிட தெலுங்கில் டைரக்டர்களுக்கு நல்லா மரியாதை தர்றாங்க."

'முதல் படத்தில் நட்சத்திர அந்தஸ்து

இல்லாத நடிகர்களை நடிக்க வைத்து வெற்றி பெற்ற நீங்கள், பிறகு நட்சத்திரங்களை நம்ப ஆரம்பித்து விட்டீர்களே...'

"படத்துக்கு அதிக வலிமையும், அதிக வசூலும் சேர்க்க வேண்டியிருக்கே! சூர்யவம்சத்தில் சரத்குமார், வானத்தைப் போல படத்தில் விஜயகாந்த் அந்தந்தப் படங்களோட ஐம்பது சதவிகித வசூலுக்குக் காரணம். வாய்ப்பைப் பொருத்து நான் பெரிய ஹீரோவை வைத்தும் இயக்குவேன், வளர்ந்து வருபவர்களை வைத்தும் இயக்குவேன்."

**ஈடுபாடுன்னா இன்னா சார்?**

'உங்களால் ஒரு பிரம்மாண்டமான படம் எடுக்க முடியுமா?' என்று சவால் விட்டோம்.

"கோடி ரூபாயை ஒரே நாளில் செலவு செய்ய முடியும். சம்பாதிக்க முடியுமா? பிரம்மாண்டமாகச் செலவு செய்து தயாரிப்பாளரை ரிஸ்க்கில் சிக்க வைப்பதில் எனக்கு உடன்பாடில்லை. அதனால் பிரம்மாண்டம்னாலே பயம்தான்."

'புதுப்புது இயக்குநர்களெல்லாம் தயாரிப்பாளர்களாகிறார்கள். நீங்கள்...' என்று நாம் முடிக்கவில்லை...

"ஒரு படைப்பாளியா இருப்பதில்தான் எனக்கு விருப்பம். என்னை ஒரு முதலாளியா நினைக்கக்கூட முடியலை" என்று படபடவென்று பேசுகிறார்.

'வானத்தைப்போல' படத்தில் அண்ணி, கொழுந்தன் இடையிலான உறவைக் கண்ணியமாகக் காட்டினீர்கள். ஆனால் அந்தப் புனிதமான உறவைத் தவறாகக் காட்டிய 'வாலி'யும், 'உயிரு'ம் கூட வெற்றி பெற்றுள்ளனவே...'என்று வாயைக் கிளறினால்,

"எது வெற்றி? அண்ணி, கொழுந்தன் உறவை நாகரிகமாகக் காட்டிய வானத்தைப்போல படத்தைத் தமிழ்ல மட்டுமில்லாம கன்னடத்திலயும் எடுத்தாங்க. 40 கோடி வசூல். தெலுங்கு, பெங்காலியிலும் சூப்பர் ஹிட். இந்த வெற்றி மற்ற படங்களுக்குக் கிடைச்சிருக்கா? சொல்றதுக்கு எவ்வளவோ நல்ல விஷயம் இருக்கு. தயவு செய்து பரபரப்புக்காக உறவுகளைக் கொச்சைப் படுத்தாதீங்க. ப்ளீஸ்" என்று இயக்குநர்களுக்கு அட்வைஸ் சொல்லிப் பேட்டியை முடித்துக் கொண்டார் விக்ரமன்.

**- அருள்செல்வன்**



• ஜெனிலியா

அக்பர்கான் புக்தி இறந்துவிட்டார். இவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் பயின்ற பழங்குடியினத் தலைவர்.

79 வயதில் இறப்பது அதிர்ச்சிகரமான விஷயமில்லை. ஆனால், பாகிஸ்தான் ராணுவம் ஹெலிகாப்டரில் வந்து குண்டு மழை பொழிந்ததால் அவர் இறந்தது பலுசிஸ்தானைக் கலங்கடித்திருக்கிறது. பாகிஸ்தானை ஆள்வது பிரதமர் அல்லர்; முன்னாள் ராணுவத் தலைவர் என்பதை உலகுக்கு நினைவுபடுத்திய மற்றொரு சம்பவம் இது.

பலுசிஸ்தான் மாகாணம் வெகு நாட்களாகவே அதிக அதிகாரம் மற்றும் அதிக நிதியுதவியை அள்ளித் தர வேண்டும் என பாகிஸ்தான் அரசிடம் போராடி வருகிறது. ஆனால், அரசு கிள்ளித் தரவே யோசிக்கிறது.

அரசின் இந்த மாற்றாந்தாய் மனப் பான்மையை அறிய கொஞ்சம் ஃப்ளாஷ் பேக்குக்குச் செல்வோமா?

பலோச் இனத்தவர்கள் அதிகம் வசிப்பதால் பலோசிஸ்தானுக்கு அந்தப் பெயர். பலோச் இனத்தவரின் பூர்வீகம் ஈரான். பாகிஸ்தானின் மொத்த நிலப் பரப்பில் 42 சதவிகிதம் பலோசிஸ் தான்தான் என்றாலும் அது பாலைவன மலைப்பகுதி என்பதால் அங்கு மக்கள் தொகைக் குறைவு. கூடவே எப்போதும் குடிநீர்ப் பஞ்சம்.

பிரிட்டிஷார் ஆட்சியின்போது பலோசிஸ்தான் நான்கு ராஜ்ஜியங்களாக விளங்கியது. மக்ரன், கரான், லஸ்பெலா, கரத் ஆகிய நான்கில் கரத் மிகவும் பெரிய பகுதி. அதை ஆட்சி செய்தவர் மீர் அகமதுயார்கான். பிரிட்டிஷ்காரர்கள் சுதந்தரம் வழங்கியபோது 'ஒவ்வொரு ராஜ்ஜியமும் இந்தியாவுடனோ, பாகிஸ் தானுடனோ சேரலாம், அல்லது சுதந்தரமாகவும் இருக்கலாம்' என்று அனுமதி வழங்கப்பட்டது.

தமது பகுதி சுதந்தர நாடாக இருக்க வேண்டுமென்று முடி வெடுத்தார் அகமதுயார்கான்.

# ஆத்திரத்தில் முஷாரஃப்...

ஆனால் 1949, ஏப்ரல் மாதம் பாகிஸ்தானிய ராணுவம் அந்தப் பகுதியை ஆக்ரமித்தது. வேறு வழியின்றி பாகிஸ்தானுடன் இணையும் உடன்படிக்கையில் கையெழுத்திட்டார் அகமதுயார்கான். அவர் தம்பி இளவரசர் அப்துல்கான், ஆப்கானிஸ்தானில் இருந்தபடி பாகிஸ்தானுக்கெதிராக கொரில்லாப் போரில் ஈடுபட்டார்; இருந்தும் பயனில்லை.

1952-ல் பலோசிஸ்தானிலுள்ள பாலைவனப் பகுதியில் இயற்கை எரிவாயு கண்டுபிடிக்கப்பட்டதுதான் முக்கிய திருப்பம். ஆனால் இதன் பலன் பலோசிஸ்தானுக்கு வந்தடையவில்லை.

## 'இறுதி வெற்றி ராணுவத்துக்குக் கிடைத்திருக்கிறது!'

அங்கிருந்து குழாய்கள் மூலம் இந்த எரிவாயுக்கள் கிழக்கு பஞ்சாப் (பாகிஸ்தானிலும் பஞ்சாப் உண்டு) மற்றும் சிந்துவுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன.

எரிவாயு கிடைத்தாலும் மிகவும் பின்னடைந்த மாகாணமாகத்தான் இருக்கிறது, பலுசிஸ்தான். தொழில்கள் பெரிய அளவில் கிடையாது. ஆட்சியிலோ, ராணுவத்திலோ இந்த மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் மிகமிகக் குறைவு.

சமீபத்தில் எரிவாயு மதிப்பில் பலோசிஸ்தான் மாகாணத்துக்கு அளிக்கப்பட்டு வந்த ராயல்டி சதவிகிதத்தையும் பாகிஸ்தான் அரசு குறைத்துவிட, பலோசிஸ்கான் மக்கள் அரசுக்கெதிராக ஊர்வலங்கள். போராட்டங்களை நடத்தினர்.

பஷ்டூன் (பத்தான்) இனத்தவர் பலோச்சுகளோடு பாகிஸ்தான் அரசுக்கெதிராக இணைந்துள்ளனர். பலோசிஸ்தானுக்கு ஒதுக்கப்படும் நிதியில் பெரும்பங்கு அங்குள்ள பஷ்டூன் சுரங்கத் தொழிலாளிகளுக்கே செல்கிறது என்று பிரித்தாளும் சூழ்ச்சியிலும் ஈடுபட்டு வருகிறார் முஷாரஃப். ஆப்கன் அகதிகளின் காரணமாக பலோசிஸ்தானிலுள்ள பஷ்டூன்களின் எண்ணிக்கை சமீபமாக அதிகமாகி, பலோச்சுகளின் எண்ணிக் கைக்குச் சமமாகிவிட்டது.

"பலோசிஸ்தானிலுள்ள சிக்கலுக்குக் காரணமே மூன்று பழங்குடியினத் தலைவர்கள்தாம்" என்று சமீபத்தில் வெளிப்படையாகவே தனது ஆத்திரத்தை வெளிப்படுத்தினார் முஷாரஃப். அவர்களில் முக்கியமானவர்தான் சமீபத்தில் கொல்லப்பட்ட புக்தி.

பலோசிஸ்தான் தலைவர்கள் மீதும் (புக்தி உள்பட) குற்றச்சாட்டுகள் உண்டு. மக்களை வளப்படுத்துவதைவிட தங்கள் குடும்பங்களை வளப்படுத்துவதில்தான் அதிக கவனம் செலுத்தினார்கள் என்கிறார்கள். மற்ற தலைவர்களைவிட புக்தி, ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டவராக இருந்து வந்தார். எனினும் பாக். அரசு தன்னைத் தீர்த்துக் கட்டுவதில் குறியாக இருக்கிறது என்பதை அறிந்த சில மாதங்களாகவே புக்தி தலைமறைவாகி விட்டார். இறுதி 'வெற்றி' ராணுவத்துக்குக் கிடைத்திருக்கிறது.

இப்போது கோபாவேசத்தில் இருக்கிறார்கள் பலோசிஸ்தான் மக்கள். பிரதமர் சௌக் அஜீஸுக்கெதிராக நம்பிக்கையில்லா தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறது பலோசிஸ்தான் சட்டசபை.

புக்தியின் பேரன் உட்பட பல இளைஞர்கள் எதிர்ப்புக்கொடியைக் கையில் எடுத்துக் கொண்டிருக்கின்றனர். பலுசிஸ்தானில் அமைதி திரும்புமா?

ஜி.எஸ்.எஸ்.

# தீர்மானம்



அமைதியாகிவிட்ட குமரனின் தோளில் கைவைத்து ஆர்வத்துடன் கேட்டான் பத்ரி: "சொல்லுங்க குமரன். திட்டம் போட்டு உங்க காதலைக் கலைச்சது யாரு?"

"அவளைக் கல்யாணம் பண்ணிக் கிட்ட அந்த மாப்பிள்ளை!"

"அடக்கடவுளே! ஏன்?"

"வெரி சிம்பிள். அவனுக்கு பூஜாவைக் கல்யாணம் செய்துக்கணும்னு வெறி. பூஜா என்னை விரும்பறதைத் தெரிஞ்சிட்டிருக்கான். என்னை வெறுக்க வைக்கிறது எப்படின்னு திட்டம் போட்ருக்கான். நினைச்சதைச் சாதிச்சுட்டான்."

"அவனும் உங்களை மாதிரி வசதியானவனா?"

"இல்லை. விளம்பரப் படங்கள் எடுக்கறவன். அப்பர் மிடில் கிளாஸ். அழகா திரைக்கதை அமைச்சி காய்களை நகர்த்திட்டான்."

"என்ன மனுஷன் அவன்? நமக்குக் கல்யாணத்துக்குப் பார்த்த பொண்ணு வேற ஒருத்தரை விரும்புதுன்னு தெரிஞ்சா நாசூக்கா விலகிடறதுதானே பண்பு?"

"அவன் பண்பானவன்னு யார் சொன்னது?"

"இன்னொருத்தரை விரும்பற பொண்ணை அடைஞ்சே தீரணும்னு என்ன கட்டாயம்? நியாயமா அப்படிப்பட்ட பொண்ணை எப்படிப் பரிபூரணமா நேசிக்க முடியும்?"

"நேசிக்கிறதுக்காகப் பிடிவாதமா இந்தக் கல்யாணத்தை அவன் செய்யலை பத்ரி. அவளை வச்சுக் காசு பார்க்கறதுதான் அவனோட நோக்கம்."

"என்ன சொல்றீங்க?"

"பூஜா அவ்வளவு அழகாச்சே. அவளை முதல்ல விளம்பரங்கள்ல அறிமுகப்படுத்தி, அப்படியே சினிமாவில கதாநாயகியா மாத்தி, அவள் மூலமா கோடி கோடியாப் பணம் பார்க்கறதுதான் அவன் திட்டம்."

"அதுக்கு பூஜாவோட சம்மதம் வேணாமா?"

"அது கிடைக்காததாலதான் இப்ப அவங்க ரெண்டு பேருக்குள்ளே பிரச்னை! மறுபடி மறுபடி வற்புறுத்தியிருக்கான்.

**பட்டுக்கோட்டை பிரபாகர்**

இவ பிடிவாதமா மறுத்திருக்கா. வித விதமா கொடுமை செய்ய ஆரம்பிச்சிருக்கான். ஒரு எல்லையில இவ தன் அம்மா வீட்டுக்குத் திரும்பிட்டா. இப்போ பிரிஞ்சு வாழ்ந்திட்டிருக்காங்க. விவாகரத்துக் கேட்டு வழக்குப் போட்ருக்கா பூஜா''

"இதெல்லாம் உங்களுக்கு..."

''அவனே சொன்னா. கொஞ்ச நாளைக்கு முன்னாடி போன் செஞ்சா. சந்திக்கணும்னு சொன்னா. எனக்கு ஆச்சரியமா இருந்துச்சு. சென்னைக்குக் கடை வேலையா போறதாச் சொல்விட்டுப் போனேன். இதே மாதிரி மெரீனா கடற்கரையில சந்திச்சேன். 'ஓ...'ன்னு அழுதா. 'அவசரப்பட்டு உன்னைச் சந்தேகப்பட்டதுக்கு இப்போ ஆயுள் தண்டனை அனுபவிக்கிறேன்'னா. எல்லாம் சொன்னா."

''நீங்க என்ன ஆறுதல் சொன்னீங்க, குமரன்?'' என்ற பத்ரியின் கேள்விக்கு பதில் சொல்லாமல், பாறையில் கார் சாவி கொண்டு நோக்கமில்லாமல் கீறினான் குமரன்.



அழுது அழுது பூஜாவின் கண்கள் சிவந்து போயிருந்தன. புடைவையின் தலைப்பு காற்றில் துடித்தது. மணலில் பாம்பு பாம்பாக கோடுகள் போட்டன அவள் விரல்கள். முறுக்கு டின்னோடு வந்தவனை, கையசைத்து விலக்கினான் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு அமர்ந்திருந்த குமரன். கழற்றிப் போட்ட இருவரின் செருப்புகளில் இதில் ஒன்றும் அதில் ஒன்றும் தொட்டுக் கொண்டிருந்தன. அவளுடைய நிழல் அவனுடைய நிழலுக்குள் பாதி பதுங்கியிருந்தது.

"எனக்கு என்ன சொல்றதுன்னு புரியலை, பூஜா."

"நான் சந்தோஷமா வாழ்ந்துட்டிருக்கேன்னு நீ நினைச்சிட்



டிருந்திருப்பே, இல்லை?"

"ம்..."

"காதல் வலி என்னன்னு உனக்கு அதை நான் குடுத்தப்போ புரியலை குமரன். இப்போ ரொம்ப நல்லாப் புரியுது. எவ்வளவு தூரம் உன்னை நோகடிச்சேன்! எனக்கு இது தேவைதான் ஒதுக்கினியே..."

"அப்படில்லாம் பேசாதே பூஜா. என்னைச் சந்தேகப்பட்டு வெறுத்து, உனக்கு நல்லா வேணும்'னு வக்ரத்தனமா என்னால நினைக்க முடியலை பூஜா.."

"முடியாது; ஏன்னா... நீ ஒரு ஜென்டில்மேன்."

"ஏன்னா... நீ நான் நேசிச்ச ஒரு பெண். ஒரே பெண். நீ என்னை விட்டு விலகியிருக்கலாம். உன்னோட நான் நேசிப்பில் இருந்தப்ப நிகழ்ந்த சம்பவங்கள் மனசை விட்டு விலகாதே பூஜா. நிரந்தரமான மறதியை மரணம் மட்டும் தானே தரும்? ரொம்பக் கஷ்டமா இருக்கு."

"உன்னைக் கூப்பிட்டு இதெல்லாம் சொல்லாமலே நான் இருந்திருக்கலாமோ குமரன்? மறுபடியும் வேற விதத்துல கஷ்டப்படுத்தறேனா? ஐ ம் ஸாரி."

"சேச்சே..."

"நீ நல்லவன்னு நான் புரிஞ்சுக்கிட்டேன்னு உனக்குத் தெரியணும்னு நினைச்சேன் குமரன். தப்பா?"

"இல்லை."

"வியாபாரம் எல்லாம் எப்படி இருக்கு?"

"நல்லாத்தான் போகுது. அதிருக்கட்டும், என்ன உன் திட்டம்? என்ன செய்யப் போறே?"

"சொன்னனே, விவாகரத்துக்கு விண்ணப்பிச்சிருக்கேன். தரமாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கிறான். வற்புறுத்தினா, கோர்ட்ல நான் நடத்தை கெட்டவ, எனக்குப் பல பேரோட தொடர்பு இருக்குன்னு சொல்வானாம்."

"ச்சீ! என்ன மனுஷன் அவன்?"

"மனுஷ வகையிலயே சேர்க்க முடியாது குமரன். மூளை பூரா பணம்! வக்ரம்! இது ரெண்டு மட்டும்தான்! ஒரு தடவை பெங்களூர் புறநகர்ல, ஒரு தியேட்டர்ல செகண்ட் ஷோ பார்த்துட்டு வெளில வந்தோம். மணி ஒண்ணு. டாக்ஸி பிடிச்சிட்டு வர்றேன்னு போனான். ஆளைக் காணோம். கால் மணி, அரை மணி, ஒரு மணி நேரம் ஆச்சு. வரலை. பதறுது. நடுரோட்ல ரெண்டு மணிக்குத் தனியா நிக்கிறேன். பக்கத்துல டாக்ஸி ஸ்டாண்ட் வந்தா நிறைய டாக்ஸி நிக்குது. அவனைக் காணோம். ஒரு டாக்ஸி பிடிச்சு பக்கத்துல இருக்கிற ஹாஸ்பிடல்ஸ் போய்த் தேடறேன். போலீஸ் ஸ்டேஷன் போய்ப் பார்க்கறேன். பதறி, துடிச்சி, பயந்து, நடுங்கி, விடிகாலைல நாங்க தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்தா செல்போனை ஆஃப் பண்ணிட்டுப் படுத்துத் தூங்கிட்டு இருக்கான். சாதாரணமாச் சிரிக்கிறான். நான் காணோம்னா பதறுவியான்னு பார்த்தேங்கறான். என்னை யாராச்சும் ஏதாச்சும் பண்ணியிருந்தா என்ன ஆகறதுன்னா, அதுக்கும் சிரிக்கிறான். அதுக்கப்புறமாவது நீ நடிக்கிறதுக்கு சம்மதிப்பியேன்றான். இவனோட இனிமே சேர்ந்து வாழ முடியாதுன்னு அப்பத்தான் தீர்மானிச்சேன் குமரன்."



"இடியட்! எனக்கு வர்ற ஆத்திரத்துக்கு..."

"விடு! விஷப் பாம்புன்னு தெரியாம எடுத்துக் கழுத்துல போட்டுக்கிட்டா, அது கடிக்கத்தானே செய்யும்?"

"உங்க அப்பா, அம்மா என்ன சொல்றாங்க?"

"சொன்னா வேடிக்கையா இருக்கும் குமரன். எப்படியாவது அனுசரிச்சிக்கிட்டு அவனோட வாழணும்னு தெரியாதான்னு எதிர்பார்க்கறாங்க."

"என்ன முட்டாள்தனம் இது? ஒரு மிருகத்தோட எப்படி வாழ முடியும்?"

"அவங்களுக்கு நான் ஒரு பாரம்! கல்யாணம் செஞ்சுக் கொடுத்ததும் அந்தப் பாரத்தை இறக்கி வைச்சாச்சு. இப்போ மறுபடி பாரத்தைச் சுமக்கச் சொன்னா எப்படி?"

"அதுக்காக?"

"எல்லாருக்கும் அவங்கவங்க கோணம்னு ஒண்ணு இருக்கு, குமரன். இப்ப நான் எங்க அப்பா, அம்மாவோட இல்லை. தனியா ஒரு மாடி போர்ஷன் வாடகை எடுத்துத் தங்கிருக்கேன். ஒரு கம்பெனில வேலை பார்த்துட்டிருக்கேன். விவாகரத்துக்கு என் தனி முயற்சிலதான் மெனக்கெட்டுக்கிட்டிருக்கேன்."

கர்ச்சிப் எடுத்துக் கண்களைத் தொட்டுக் கொண்டான் குமரன்.

"பூஜா, உனக்கு நான் என்ன உதவி செய்ய முடியும்?"

"நத்திங்! உங்களை அவமானப்படுத்தி, நோகடிச்சு, உங்க காதலை மிதிச்சிட்டுப் போன ஒருத்தி போன் செஞ்சதும் எந்தக் கோபமும் மனசுல இல்லாம வந்து பொறுமையா அதே நட்போட கேட்டுக்கிட்டீங்களே, இதை விட வேற என்ன உதவி செய்ய முடியும்? நீங்க என் மேல வெறுப்பா இல்லைன்னு தெரிஞ்சிக்கிட்டதே ரொம்ப ஆறுதலா இருக்கு குமரன்."



"என்னைப் பற்றித் தெரிஞ்சிக்காம என்னை அவன் திட்டுறான். அவன் கிட்ட என்னத்த பேசுறது?"

"என்ன திட்டுறான்?"

"பல்லை உடைச்சிடுவேன்னு திட்டுறான்."

- மு.பெரியசாமி

"என்னைக்கும் எந்தச் சூழ்நிலையிலயும் உன்னை என்னால வெறுக்க முடியாது பூஜா."

"ஏன்னா... நீங்க உங்க காதல்ல அவ்வளவு உண்மையா இருந்தீங்க. நான்தான் உண்மையா இல்லை. உண்மையா இருந்திருந்தா அநாமதேயமா வந்த ஒரு ஆதாரத்தை நிஜம்னு நம்பியிருக்க மாட்டேன். நல்லதை நம்ப மறுக்கற மனசு கெட்டதைச் சட்டுனு நம்பிடுது."

"நான் ஒண்ணு சொல்லட்டுமா, பூஜா?"

"என்ன?"

"எங்க வீட்ல எனக்குக் கல்யாணத்துக்குப் பெண் பார்த்திட்டிருக்காங்க."

"கங்கிராட்ஸ். அந்த அதிர்ஷ்டசாலிக்கு என் அட்வான்ஸ் வாழ்த்துக்கள்!"

"பூஜா! விவாகரத்துக்கு அப்புறம் நீயே ஏன் எனக்கு மனைவியா வரக்கூடாது?"

சட்டென்று சிரித்தாள் பூஜா.

"பைத்தியமா உனக்கு? கருணை அடிப்படையில கல்யாணத்தை யோசிக்கக் கூடாது, குமரன்."

"இல்லை. காதலோட அடிப்படையிலதான் யோசிக்கிறேன். நடுவில என்ன நடந்திருந்தாலும் எனக்குக் கவலை இல்லை, பூஜா."

"எனக்குக் கவலை இருக்கே... தகுதின்னு ஒண்ணு வேணும் குமரன். அதை நான் இழந்துட்டேன். உற்சாகமா ஒரு திருமண வாழ்க்கை ஆரம்பிக்கணும். வருத்தத்தோட ஆரம்பிக்கக் கூடாது. ஒரே ஒரு நாள்ல முடியறதில்லை வாழ்க்கை. நீயே சொன்னே, மரணம் வரைக்கும் நினைவுகள் தொடரும்னு. அது இம்சை - ரெண்டு பேருக்கும். நீ இயல்பா என்கூட சண்டை போடணும்; கோபப்படணும். ஆனா நீ தயங்குவே. எதையோ எதையோ மனசுல வச்சுக்கிட்டு நீ கோபப்படறதா நான் நினைக்கக்கூடாது. அப்படி நான் நினைச்சிடுவேனோன்னு நீயும் நினைக்கக்கூடாது. மனசுக்குள்ளே ஒரு ரகசியப் போராட்டம் வந்துடும். ஸோ... இந்த நினைப்பை இந்த நிமிஷமே வெட்டிடு. உங்க வீட்ல பாக்கற ஒரு நல்ல பொண்ணை நீ கல்யாணம் பண்ணிக்கணும் குமரன்."

"பூஜா!" என்று அவள் கரத்தைப் பற்றிக்கொண்டான். அதன்மேல் இரண்டு ஜோடி விழிகளிலிருந்தும் நான்கு சொட்டு கண்ணீர்த் துளிகள் விழுந்து சங்கமித்தன.

"சொல்லுங்க பத்ரி, இப்படிப்பட்ட சூழ்நிலையில எப்படி என்னால பூஜாவை மறக்க முடியும்? எப்படி நிம்மதியா மஞ்சரியைக் கல்யாணம் செஞ்சுக்க முடியும்? நான் ஒரு முடிவுக்கு வந்துட்டேன்" என்றான் குமரன் பாறையிலிருந்து எழுந்து. (தொடரும்)

# தொலையும் நிமிடங்கள்!

கோவி. லெனின்

குளிக்கும்போது
கட்டியிருக்கும்
வேட்டியோ துண்டோ
வெங்கடேசு
பயலின் கையில்
வலையாக மாறி
வாரியெடுக்கும்
குளத்து மீன்
குஞ்சுகளை

தூண்டில் முள்ளில்
குரவை மீனை
லாகவமாய்
சிக்கவைக்கின்ற
கலை அறிந்தவன்
'கட்ட' சரவணன்

விரால் மீன் பிடித்து
வீட்டுக்குத்
திரும்புகையில்
புலி வேட்டைக்காரன் போல்
பெருமையடிப்பான்
சங்கரு

ஊர் துறந்து
நகரம் புகுந்த பிறகு...
தொட்டிமீன் ரசிப்பிலேயே
தொலைகின்றன நிமிடங்கள்

பட்டணத்து மீன்கள்
பழகியிருக்கின்றன
கண்ணாடித் தொட்டியை
கடலாக்கிக் கொள்வதற்கு!

அனந்தபத்மநாபன் 06

# பொய், பொய்யைத் தவிர வேறில்லை!

சென்னை, செப்-3. 'பெரியார் திரைப்படத்தில் மணியம்மை கதாபாத்திரத்தில் நடிக்க என்னைத்தான் ராமதாசும், திருமாவளவனும் ஆதரிக்கின்றனர்' என நடிகை நமீதா நேற்று நிருபர்களிடம் தெரிவித்தார்.

டைரக்டர் ஞானராஜசேகரன் தந்தை பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை இயக்கி வருகிறார். இப்படத்துக்கு முதலமைச்சர் கருணாநிதி தமிழக அரசு சார்பில் ரூபாய் 95 லட்சம் உதவியளித்து, வசனம் எழுதுவதிலும் உதவி செய்வதாக அறிவித்தார்.

பெரியாரின் இரண்டாவது மனைவியான மணியம்மையின் கதாபாத்திரத்தில் நடிக்க தமிழ்க் கலாசாரம், பண்பாடு, நாகரிகம், அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய குணங்கள் நிறைந்த ஒரு பெண் நடிகை தேவை என அறிவிக்கப்பட்டது.

இந்நிலையில் அக்கதாபாத்திரத்தில் நடிக்க, நடிகை குஷ்பு தேர்ந்தெடுக்கப்பட்டார். இதை தே.மு.தி.க. தலைவர் விஜயகாந்த் பெரிதும் வரவேற்றார். அதனால், கோபமடைந்த பா.ம.க. எம்.எல்.ஏ.க்கள் சட்டசபையில் பேச வேறு விஷயங்களே இல்லாத காரணத்தால், இந்தப் பிரச்னையை விவாதத்துக்குக் கொண்டு வந்தனர்.

'நடிகை குஷ்பு அந்த வேடத்தில் நடித்தால் பால்தாக்கரேயின் துணையுடன் எதிர்த்துப் போராடுவோம். படப்பிடிப்பை நடக்க விடமாட்டோம்' என சட்டசபையில் அறிவித்துவிட்டு, வெளிநடப்பு செய்தனர். இதை எதிர்த்து, தமிழகம் முழுவதும் நாளை முதல் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக அறிவித்துள்ளனர்.

இந்நிலையில், நேற்று விருத்தாசலத்தில் பொதுக் கூட்டமொன்றில் பேசிய விஜயகாந்த், 'பா.ம.க.வினர் குஷ்புவை எதிர்ப்பதென்பது கோலிவுட்டையே எதிர்ப்பதற்குச் சமம். வேண்டுமென்றால் அன்புமணிக்கும் பெரியார் படத்தில் நடிக்க ஒரு வாய்ப்புக் கொடுக்கலாம்' என்றார்.

இது குறித்துப் பெரும் சர்ச்சைகள் கிளம்பியுள்ள நிலையில், 'திருமாவளவனும் ராமதாசும் என்னை, என் நடிப்பை இதுவரை எதிர்த்ததே இல்லை. அவர்களின் கட்சிக்காரர்கள் பலர் எனக்காக ரசிகர் மன்றம் வைத்துள்ளனர். எனவே அந்தக் கதாபாத்திரத்தில் குஷ்புவுக்குப் பதிலாக நான் சம்பளமின்றி நடிக்கிறேன்' என முன்னணி நடிகை நமீதா வெளிப்படையாக அறிவித்துள்ளார்.

இந்த தேசியப் பிரச்னை குறித்து இன்று கூடும் மாநிலங்களவைக் கூட்டுக் குழு விவாதத்தில் விவாதிக்கப்படும். யாரை நடிக்க வைக்கலாம் என்பது குறித்து ஒருமனதாக மசோதா நிறைவேற்றப்பட்டு, ஜனாதிபதி அப்துல்கலாமின் ஒப்புதலுக்காக அனுப்பி வைக்கப்படும் என மத்திய அமைச்சர் அன்புமணி தெரிவித்துள்ளார்.

**- முகில்**

## குஷ்புவுக்கு பதிலாக நான் நடிக்கிறேன்!



## – நமீதா அதிரடி

# செல்போனுக்குத் தடா!

சென்ற வாரம் சென்னையிலிருந்து மதுராந்தகத்துக்கு அரசுப் பேருந்தில் பிரயாணம் செய்தேன். ஓட்டுநருக்கு ஒரு செல்போன் அழைப்பு. உடனே அவர் செல்போனைத் தம் காதில் வைத்துக் கொண்டு பேசிக்கொண்டே வந்தார். கிட்டத்தட்ட ஐந்து நிமிடங்கள் ஒரு கையிலேயே பேருந்தை ஓட்டினார். நானும் மற்றவர்களும் என்ன ஆகுமோ என்று பயந்தவாறு பயணித்தோம். விபத்துகள் மலிந்துவிட்ட இக் காலத்தில் ஓட்டுநர்கள் செல்போனில் பேசத் தடை விதிக்க வேண்டும்!

- டி.என்.பாலகிருஷ்ணன், சென்னை

சமீப நாட்களில் தினசரிகளைப் பிரித்தாலே ஏதேனும் செக்ஸ் புகார்கள், விசாரணைகள் என்று விலாவாரியான செய்திகளைக் காண்கிறோம். பல ஆண்டுகளுக்கு முன் நடந்த கொடுமைகள் என்றாலும் இன்று நீதிமன்றத்தில் தாவா எழுப்பி, அதன் மூலம் சம்பந்தப்பட்டவர்களை அவமானப்படுத்தி, அதன் மூலமாக அரசியல் ஆதாயம் தேடவும் சிலர் முனைகின்றனர். இதற்கு வழிகாட்டியாக அமெரிக்காவின் முன்னாள் அதிபர் க்ளிண்டன் விவகாரம் இருந்தது எனலாம். பாரதப் பண்பாட்டுச் சீரழிவுக்கு வழிவகுக்கும் இந்தச் செய்திகள் பரபரப்புக்காக வெளியிடப் படுகின்றன. செக்ஸ் குற்றம் எதாக இருந்தாலும், நீதிமன்றத் தீர்ப்பை மட்டுமே வெளியிட வேண்டுமென்றும் அதற்கு முந்தைய செய்திகள் எதையும் வெளியிடக் கூடாது எனத் தடை செய்து ஏன் சட்டமியற்றக் கூடாது?

- இ.ரங்கசாமி, மதுரை

மழைக்காலம் வர இருப்பதால் அனைத்துச் சாலைகளிலும் மழை நீர் வடிகால்கள் அமைக்க அரசு தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டும். சாலை போடுவதால், சாலையின் உயரம் தொடர்ந்து அதிகரித்துக்கொண்டே செல்கிறது. இதனால் வீடுகளின் உயரம் தாழ்ந்து விடுகிறது. போதுமான வடிகால்கள் இல்லாததால் வீடுகளுக்குள் தண்ணீர் புகுந்து விடும் வாய்ப்புமிருக்கிறது. இது தவிர உயரமாகக் கட்டப்பட்டுள்ள கட்டடங்களில் சாய்வுப்பாதை (RAMP) அமைத்து, வாகனங்களை ஏற்ற, இறக்க வசதியாக இருக்கும் இடங்களில் மழைநீர் வழிந்து ஓடி, சாலைகளில் தேங்கி விடுகிறது. இதனால் சாலைகள் பழுதாவதுடன் வாகன ஓட்டிகள், பொதுமக்களுக்கும் மிகவும் சிரமம்! சாய்வுப் பாதைகளின் கீழ் மழைநீர் உட்புகுந்து செல்ல, துவாரங்களை அமைத்து மழைநீர் வடிகால்களில் இணைக்க அரசு முயல வேண்டும். மழைநீர் வடிகால்களை நல்ல முறையில் இணைத்து, கசிவுநீர்த் தொட்டிகளின் மூலம் வடிகட்டி, மழைநீரைச் சேமிக்கும் அமைப்பான ஏரி, குளம் போன்றவற்றில் விட, உரிய பம்ப்பிங் வசதியை ஏற்படுத்த வேண்டும். இதற்கு அரசு, தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், நல்வாழ்வு சங்கங்களின் உதவியை நாடலாமே!

- ஜி.எஸ்.ராஜன், சென்னை

வார, மாத இதழ்கள் இன்றைக்கு ஏராளமாக வெளிவருகின்றன. ஆனால் அவற்றில் சிறுகதைகள், தொடர்கதைகளுக்குத்தான் பஞ்சமோ பஞ்சம். நமது இந்திய இலக்கியத்தின் உயிர்மூச்சே கதைகள்தாம். அவற்றை அள்ளித் தந்திட வேண்டாமா, பத்திரிகைகள்? ஒரு சில இதழ்களைத் தவிர, மற்றவை யாவும் இப்போது கதைகளைக் குறைத்து, பரபரப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து வருகின்றன. மீண்டும் அவற்றில் பூத்துக் குலுங்க வேண்டும் கதைகள். நிறைவேறுமா, வாசகர்களின் ஏக்கம்?

- என். கோமதி, நெல்லை -7

இன்று மக்களிடையே ஃபாஸ்ட் ஃபுட் மோகம் வேகமாகப் பரவி வருகிறது. அதனால் உடல்நலனில் எவ்வாறெல்லாம் பாதிப்பு ஏற்படும் என்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதும் இல்லை. நம் தாத்தா, பாட்டி காலத்தில் வாரம் ஒருமுறை ஏதாவது ஒரு கிழமையில் விரதம் இருந்து வந்தார்கள். பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை சஷ்டி, ஏகாதசி விரதம், மாதம் ஒருமுறை கார்த்திகை விரதம் என்று இருந்து அவர்கள் உடலைச் சுத்தப்படுத்தி, ஆரோக்கியமாக இருந்தார்கள். ஒவ்வொரு மாதமும் ஏதாவது விசேஷ நாட்கள் இருந்து கொண்டே இருக்கும். உதாரணம், கார்த்திகை சோமவாரம். ஆனால், நாம் இப்போது இந்த விரதமுறையைக் கடைபிடிக்காததோடு துரித உணவுகள் மூலமும் மிகச் சிறிய வயதிலேயே புதுப்புது வியாதிகளைச் சுமந்து கஷ்டப்பட்டுக்கொண்டு இருக்கிறோம். இனிமேலாவது நமது முன்னோர்கள் பின்பற்றிய வழிகளைக் கையாண்டு ஆரோக்கியத்துடன் இருப்போம்!

- ஆர்.பிருந்தா, மதுரை



• க்ளிண்டன்

ஒரு ஞாயிற்றுக் கிழமையின் காலைப் பொழுதில் வீட்டில் ஒட்டடை அடித்துக் கொண்டிருந்தபோது டீ ஷர்ட், பெர்முடாஸில் நுழைந்தான் பத்ரி. என் மனைவியின் செல்லத்தம்பி.

"என்ன மாமா, ஒட்டடை அடிக்கறீங்களா?" என்று கேட்டான்.

"இல்லை! வெளியே இருந்து ஒட்டடையை வாங்கி வந்து அங்கங்கே ஃபிக்ஸ் பண்ணிட்டிருக்கேன்" என்றேன்.

"ஹ..ஹ..ஹா... சூப்பர் ஜோக்!" என்று கூறி நான் நின்று கொண்டிருந்த நாற்காலி மீது சாய்ந்தான்.

"டேய் பாவி! ஆட்டாதே. விழுந்துடப் போறேன்" என்று பதறினேன்.

"நீங்க இறங்குங்க மாமா. நான் செய்யறேன்" என்றான்.

"வேணாம் சாமி. வீட்டுக்கு வந்தவனை வேலை வாங்கறீங்களான்னு உன் அக்கா என்கிட்ட குதிப்பா."

"அட, இறங்குங்க மாமா" என்ற தடிப் பயல் என் இடுப்பில் இரு கைகளையும் வைத்து அலக்காகத் தூக்கி கீழே இறக்கி விட்டான்.

ஆரணி யுவராஜ்

ஒரு சில நொடிகள் ஆடிப்போனேன். "பாவி! கீழே போட்டிருந்தா என்னடா ஆகறது? ஆபீஸ்ல ஆடிட்டிங் டைம். லீவே கொடுக்க மாட்டாங்க. ஸ்ட்ரெச்சர் அனுப்பியாவது தூக்கிட்டுப் போய்டு வாங்க" என்றேன்.

நான் பேசுவதைக் காதில் வாங்காமல் நாற்காலியில் ஏறி வேலையில் கவனமானான். எனக்கோ பயமாக இருந்தது. பயல் எதையும் ஆதாயம் இல்லாமல் செய்ய மாட்டானே. இது எந்தக் கோட்டைக்கான அஸ்திவாரம் என்பது புரியவில்லை. கவனமாக இருக்க வேண்டும்.

ஆயிற்று. சிலந்திகள் மற்றும் பெயர் தெரியாத சிறு சிறு பூச்சிகளின் சாபங்களைப் பெற்றுக் கொண்டு முகம் கழுவ ஆரம்பித்தபோது, பக்கத்தில் வந்து "மாமா" என்றான்.

"என்னடா?"

"உங்ககிட்டே கொஞ்சம் தனியா பேசணும். வெளியே வாங்களேன்."

"மாசக் கடைசிடா. கையில பணமெல்லாம் இல்லை" என்றேன்.

"பணம் யாருக்கு வேணும்? உங்களுக்கு எவ்வளவு வேணும்னு சொல்லுங்க. நான் தர்றேன்" என்றான்.

"ஓஹோ! அவ்வளவு பெரிய ஆளாயிட்டியா? வேற என்ன வேணும்? டூரு கீரு போறதுக்கு என் மாமனார்கிட்டே பர்மிஷன் வாங்கித் தரணுமா?"

"இல்லே மாமா. இது வேற விஷயம். வெளியே வாங்க, சொல்றேன்."

"சரி இரு. குளிச்சுட்டு வரேன்."

"அட! வந்து குளிக்கலாம். வாங்க மாமா" என்றவன் கையைப் பிடித்து இழுத்தான்.

"டேய்! டேய்! இருடா. சட்டையாவது போட்டுட்டு வரேன்."

அணிந்திருந்த லுங்கியை நன்றாக உதறி விட்டு சட்டையை அணியும்போது கவனித்தேன். பயல் யாருக்கோ எஸ்.எம்.எஸ். அனுப்பிக் கொண்டிருந்தான். கொஞ்சம் பயமாக இருந்தது.

# ஒரு கப் காதல்



கிளம்பும்போது ''எங்கே போறீங்க?'' என்று கேட்டாள் சகி.

''தெருமுனையில் இருக்கற ஹோட்டலுக்கு. காபி குடிச்சுட்டு வந்துடறோம்க்கா'' என்றான் பத்ரி.

"இங்கேயே பால் இருக்குடா."

''பரவாயில்லைக்கா. ஒரு சேஞ்சா இருக்கட்டும்.''

''சரி! சீக்கிரம் வந்துடுங்க'' என்று வழியனுப்பினாள். இவன் சொன்ன அதே 'சேஞ்சை' நான் சொல்லி இருந்தால்...

பாதி தொலைவு வந்ததும் கேட்டேன்: ''இப்பவாவது சொல்லுடா.. என்ன விஷயம்?''

''அவசரப்படாதீங்க, மாமா! சொல்றேன். ஆனா, நான் உங்களைத்தான் நம்பி இருக்கேன். முடியாதுன்னு மட்டும் சொல்லக் கூடாது'' என்றான்.

"பீடிகை பலமா இருக்கேடா. வம்புல மாட்ட வெச்சுடாதே, பத்ரி."

''நல்ல விஷயம்தான் மாமா'' என்றவன் அந்த ஹோட்டலுக்குள் அழைத்துச் சென்றான்.

ஒரு மேஜையைத் தேர்ந்தெடுத்து அமர்ந்தோம். எதிரே ஓர் இளம் பெண். பழகியவள் போல் புன்னகைத்தாள்.

''இவர்தான் என்னோட மாமா. பேர் ஆதிநாராயணன். ரொம்ப நல்லவர். என் மேல ரொம்ப அன்பு. எனக்காக எதையும் செய்வார். நானும் இவரும்...'' என்றவனைக் கையமர்த்தினேன்.

''போதும்டா, போதும்!''

"இவ என் கூட வேலை செய்யறா. ரொம்ப ப்ரில்லியண்ட். எல்லார்கிட்டேயும் கலகலப்பாப் பழகுவா. பெரியவங்ககிட்டே ரொம்ப மரியாதையா நடந்துப்பா. பாவம்! சின்ன வயசுலயே அம்மா போய்ட்டா. அப்பாவும் அண்ணனும்தான். அவங்களுக்கு இவ மேலே ரொம்ப உயிர். நீங்க என் மேல வெச்சிருக்கற மாதிரி'' என்று முடித்தான்.

எனக்குப் புரிந்து விட்டது. ஆனாலும் கேட்டேன்: "என்னடா அவ... இவன்னு சொல்றே?''

''நான் இவளைக் காதலிக்கறேன் மாமா. இந்த விஷயத்துல நீங்கதான் ஹெல்ப் பண்ணணும்'' என்றான்.

வயிற்றுக்குள் பலூன் வெடித்தது. "ஏண்டா எனக்கும் உன் அப்பனுக்கும் இருக்கிற நல்ல உறவு உனக்குப் பிடிக்க லையா?"

"அப்படிச் சொல்லாதீங்க மாமா. இவ வீட்டுல எந்தப் பிரச்னையும் இல்லை. அவங்க ரெடியா இருக்காங்க. அப்பா, அம்மாதான் சம்மதிக்கணும். நீங்க சரின்னு சொன்னா இது பப்ளிக் பிளேஸ்னு கூடப் பார்க்காம காலைப் பிடிக்க ரெடி" என்றபடி பத்ரி எழுந்தான். அவளும் தான்.

ஐயையோ! செய்தாலும் செய்வார்கள். அப்புறம் பார்க்கிறவர்கள் என்னை மந்திரி என நினைத்துக்கொண்டு மனுவை கினுவை நீட்டினால் என்ன செய்வது?

"உட்கார்ந்து தொலைங்க. உன் பேரையே சொல்லலையே" என்றேன்.

"ரோஸ்லின்" என்றாள்.

அடுத்த பலூன் வெடித்தது. பத்ரியைப் பார்த்தேன்.

"காதலுக்கு மதமில்லை மாமா" என்றான்.

"ஆனா உன் அப்பனுக்கு இருக் கேடா..."

"ப்ளீஸ் மாமா" என்றபடி மீண்டும் எழுந்தான். அவளும் எழுந்தாள்.

உள்ளுணர்வின் எச்சரிக்கையையும் மீறி வந்து மாட்டிக்கொண்ட என் மடத் தனத்துக்கு ஒரே தீர்வு...

"தினமும் ஓசி பேப்பர் கேட்டு வந்துடறீங்களே... வெட்கமாயில்லே?"

"தினமும் வர்றது தெரிஞ்சும் ஒரு காபிகூட கொடுக்காம அனுப்பறீங் களே... உங்களுக்கு வெட்கமா யில்லே."

- ஜெயஸ்ரீ



## இப்படித்தான் ஆரம்பிக்கிறார்கள்..!

காதலுக்காகவும் கடமைக்காகவும் போராடுகிற ஓர் இளைஞனின் கதை 'செங்காத்து'. "ராணுவத்தை மையப்படுத்தி நடக்கும் கதையில், காதலை நுழைத்து ஒரு கலவையாக படத்தை எடுத்து வருகிறோம்" என்று கூறும் இயக்குநர் இந்துநாதனுக்கு இது முதல் படம். வேலு பிரபாகரனிடம் உதவி இயக்குநராகப் பணிபுரிந்தவர். 'செங்காத்தை' டி.கே.எம். ஃபிலிம்ஸ் சார்பில் எஸ்.ஏ.ஜலால் தயாரிக்கிறார். "பணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் நல்லதொரு படத்தை மக்களுக்குத் தரவேண்டுமென்ற நோக்கத்தில் இயங்கி வருகிறோம். தொடர்ந்து

"சரிடா... அப்பாகிட்டே பேசறேன்."

"நல்லபடியா முடிப்பேன்னு அக்கா மேல சத்தியம் பண்ணுங்க."

"முதுகு வலிக்க வீட்டைக் கழுவித் தள்ளிட்டு இருக்கற அவளை ஏண்டா இழுக்கறே?" என்றேன் எரிச்சலுடன்.

சூடம் மட்டும்தான் ஏற்றவில்லை. மற்றபடி சத்தியம் வாங்கிக்கொண்டு தான் காபியைக் குடிக்கவே விட்டார்கள்.

வழியெல்லாம் அவர்களது காதலின் மகத்துவத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்ட வந்தான். அவள் தினமும் நள்ளிரவு ஒரு மணிக்கு எஸ்.எம்.எஸ்ஸில் இவனுக்கு குட்மார்னிங் சொல்வாளாம்.

"ஏன் அப்படின்னு சொல்லுங்க மாமா?"

"எனக்கு என்னடா தெரியும்?"

"எனக்கு குட்மார்னிங் சொல்ற முதல் ஆளா அவளாத்தான் இருக்கணுமாம். வேற யாரும் சொல்லிடக் கூடாதாம். எவ்வளவு அன்பு பாருங்க!"

"........"

"அதே சமயம் காதலர் தினத்தப்ப மட்டும் லேட்டாதான் வாழ்த்துச் சொல்வா. ஏன் சொல்லுங்க?"

"அதையும் நீயே சொல்லித் தொலை!"

"அவளைத் தவிர வேற யாரும் எனக்கு

அதிரடிப் படங்களே வந்து கொண்டிருக்கும் சூழலில் 'செங்காத்து' ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கி வைக்கும்" என்கிறார் ஜலால். கதைக்கான படப்பிடிப்பு முடிவடைந்துவிட்ட நிலையில், அடுத்ததாக பாடல் காட்சிகள் இயற்கை எழில் சூழ்ந்த தமிழக கிராமங்களில் எடுக்கப்பட்டு வருகின்றன.

"புதிய சிந்தனையோடு, புதியவர்களால் எடுக்கப்படும் செங்காத்து, புதிய தடங்களை ஏற்படுத்தும் என்ற நம்பிக்கை இருக்கிறது. நல்ல சினிமாவுக்கு ஆதரவு தரும் மக்கள், எங்களையும் அரவணைப்பார்கள்"



• 'செங்காத்து' படத்தில்...

என்கிறது ஒட்டுமொத்தக் குழுவும். ம்... எல்லோரும் இப்படித்தான் ஆரம்பிக்கிறார்கள்.

- சுதர்சனா

வாழ்த்து அனுப்ப மாட்டாங்கன்னு உறுதியா நம்பறானாம். காதலுக்கு நம்பிக்கைதானே மாமா முக்கியம்?" என்று சிலிர்த்தான்.

"தூத்தேறி! ரெண்டுப் பேரோட 'சிம்' கார்டுகளையும் தூக்கிக் குப்பையிலப் போட."

முதலில் என் துணையிடம் சொல்லி அவனின் உறுதுணையுடன் மாமனார் மாமியாரிடம் பேசினேன். மாமியார் வீட்டுப் பூச்சி; பிரச்னை இல்லை. மாமனார்தான் எகிறினார்.

"இந்த அர்ஜுனனோட காதலுல நீங்க கிருஷ்ணனா?" என்று ஆரம்பித்து தாம் தூம் எனக் குதித்தார்.

காதல் தோல்வியால் தற்கொலை செய்து கொண்டவர்களைப் பற்றி எடுத்துச் சொன்னேன். இதற்காகவே நூலகத்தில் உட்கார்ந்து ஒரு மாத செய்தித் தாள்களைப் புரட்டி 'நோட்ஸ்' எடுத்திருந்தேன்.

இறுதியில் மனிதர் சில நிபந்தனைகளுடன் இறங்கி வர...

கல்யாண மண்டபத்தில் ஓடியாடி வேலை செய்து கொண்டிருந்தேன்.

"என்னப்பா ஆதி! இந்தக் கல்யாணத்துக்கான மூல காரணமே நீதானாமே?" என்று ஏதோ ஓர் உறவு கேட்டது.

"ஏதோ என்னால முடிஞ்சது" என்றேன் அடக்கமாக.

"ஆனா உன்னோட மாமனாருக்கு இதுல இன்னமும் கொஞ்சம் வருத்தம் தான் போலிருக்கு. உன் மேல இருந்த மரியாதையையும் குறைச்சுட்டாருன்னு அவரோட பார்வையும், நடவடிக்கையும் சொல்லுது. பார்த்து! இதை மனசுல வெச்சுட்டு உயில் எழுதறப்ப கிழம் விளையாடிடப் போகுது" என்று கிளப்பி விட்டு நகர்ந்தான்.

நான் ஒன்றும் மாமனார் சொத்தை எதிர்பார்ப்பவன் இல்லைதான்...

'மாமா" என்று குரல் வந்தது. திரும்பினேன்.

கல்யாணி. பத்ரியின் தங்கை. பக்கத்தில் அவளைவிட உயரமாக அவளைவிடச் சிகப்பாக ஒரு பையன்.

"என்ன மாமா, இப்படி வியர்த்து இருக்கு? பாவம்... ஓடியாடி வேலைச் செய்யறீங்க. இந்தாங்க, காபி குடிங்க" என்று நீட்டினாள்.

"சார் யாரு?" என்று எச்சரிக்கையுடன் கேட்டேன்.

"என்னோடு ஓர்க் பண்றார். பேரு இப்ராஹிம்..." என்று ஆரம்பித்தாள்.

# 10.9.2006 முதல் 16.9.2006 வரை

**மேஷம்** : நல்ல யோகமான வாரம். பொருளாதார மேன்மை ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். பணக் கஷ்டம் வராது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். எதிர்பாராத பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். செலவினங்கள் கட்டுக்கடங்கி இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். பதவி உயர்வு ஏற்படும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். வாகன வசதி பெருகும். உடல் நிலை நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபச் செலவு ஏற்படும். மன சஞ்சலம் தீரும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**ரிஷபம்:** மன இறுக்கம் நிறைந்த வாரம். உடல் நிலையில் கவனம் தேவை. உத்தியோகத்தில் எதிர்ப்புகள் இருக்கும். பொருளாதார நிலைமை சுமாராக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். தூர தேச அழைப்பு கிட்டும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். வியாபாரத்தில் நல்ல முற்போக்கான சூழ்நிலை ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். புதிய சொத்துகள் வாங்க நல்ல தருணம். கொடுக்கல், வாங்கல் நல்ல பலனை அளிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். தாயின் உடல்நலம் குறையலாம். ராகு / கேது வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கடகம்:** செல்வாக்கு பெற்ற வாரம். எதிலும் வெற்றி வாகை சூடுவீர்கள். கல்வி வளம் சிறப்புப் பெறும். தொழில் துறையில் அனுகூலம் ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். நீண்ட காலக் கனவுகள் நிறைவு பெறும். உடல் நிலை நன்றாக இருக்கும். வழக்கு வெற்றி பெறும். புதிய வேலைவாய்ப்பு கிட்டும். பணக் கஷ்டம் வராது. புதிய சொத்துகள் சேரும்.

# நடக்குமென்பார்

வேலையில் இடமாற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் சங்கடங்கள் நிகழ வாய்ப்புண்டு. திருமணத் தடை விலகும். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்தல் நல்லது. வியாபாரத்தில் சுமாரான பலன் கிட்டும். புதிய முயற்சிகளைத் சற்றுத் தள்ளிப் போடவும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனைத்தரும்.

**மிதுனம்** : மேன்மையான வாரம். தொழில்துறையில் இடம் மாற்றம் ஏற்படும். வீட்டில் சுபகாரியம் கைகூடும். வேலைப்பளு அதிகரிக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும்.

**தஞ்சை பரத்வாஜ்**

நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். திருமண முயற்சி கைகூடும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம்:** பேச்சு வார்த்தையில் கவனம் தேவை. கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. பொருளாதார நிலை சுமாராக இருக்கும். உடல் நிலையில் கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. ஜாமீன் போட வேண்டாம். கூட்டுத் தொழிலில் கவனம் தேவை. உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். வியாபாரம் சற்று மந்தமாக இருக்கும். திருமணத் தடை ஏற்படும். பதவியில் இருப்பவர்கள் கவனமாக இருக்கவும். குழந்தைகளால் மன உளைச்சல் இருக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.



**கன்னி:** மனக்குழப்பத்தில் இருந்து விடுபட வேண்டிய வாரம். குடும்பத்தில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வழக்கு வெற்றி அளிக்கும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். திருமணக் காரியம் கைகூடும். கணவன் – மனைவிக்குள் அனுசரணை தேவை. பண நெருக்கடி இருக்காது. குழந்தைகளால் மன சந்தோஷம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். எதிர்ப்புகள் விலகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். உத்தியோகத்தில் முன்னேற்றம், இடமாற்றம் ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். ராகு / கேது வழிபாடு செய்து வருவது நலம்.

**துலாம்:** நற்பலன்கள் நிறைந்த வாரம். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். திருமணக் காரியம் கைகூடும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். வீடு / மனை வழியில் ஆதாயம் ஏற்படும். வழக்கு வெற்றி பெறும். உத்தியோகத்தில் நற்பலன் ஏற்படும். புதிய வேலை கிடைக்கும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். பணக்கஷ்டம் வராது. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நற்பலன் ஏற்படும். புதிய தொழில் முயற்சி வெற்றி அளிக்கும். அரசாங்க வழியில் சிக்கல் வரலாம். உறவினர்கள் வழியில் மனஸ்தாபம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

# நடக்கும்!



**விருச்சிகம் :** எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. நண்பர், உறவினர்கள் விலகிச் செல்வார்கள். கூட்டுத் தொழில் செய்பவர்கள் கவனமாக இருக்கவும். குழந்தைகள் வழியில் நற்பலன் ஏற்படும். சுபகாரிய நிகழ்ச்சிகள் கைகூடும். உடல் நிலை நன்றாக இருக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். பதவி உயர்வு கிட்டும். புதிய தொழில் முயற்சி கைகூடும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். சொத்துகள் வாங்க நல்ல தருணம். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலன் தரும்.

**தனுசு:** மன உளைச்சல் நீங்கும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். தொழில் துறையில் இருக்கும் நெருக்கடி விலகும். பணக்கஷ்டம் வராது. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். திருமணக் காரியம் கைகூடும். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். தாயார் உடல் நிலை பாதிக்கப்படலாம். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். சிலருக்குப் புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். கணவன் – மனைவி உறவு நன்றாக

# பரத்வாஜ் பதில்கள்

**என் மகனுக்கு எப்போது திருமணம் கைகூடும்? பரிகாரம் தேவையா?**

**- எஸ்.கே. பாணி, சென்னை - 17**

உங்கள் மகனுக்குக் குருதசை நடை பெற்று வருகிறது. குருபகவான் சனியுடன் சம்பந்தம் பெற்று, கேது சாரம் சென்றதால் திருமணத் தடை ஏற்பட்டுள்ளது. பரிகாரம் எதுவும் தேவையில்லை. சர்ப்பதோஷம் உள்ள ஜாதகமாகப் பார்க்கவும். பையன் பிறந்த ஊருக்குப் பத்து மைல் தொலைவில் பிறந்த, உறவினரல்லாத பெண் அமைவாள்.

**என் மகனுக்கு 41வயதாகியும் திருமணம் நடக்கவில்லை. அவனுக்குத் திருமணம் நடக்குமா?**

**என் மகளுக்குத் திருமணமாகி, குழந்தைகள் உள்ளன. வயது 39. உடலில் ஏதாவது கோளாறு ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. அவள் எப்போது பூரண நலம் பெறுவாள்?**

**- ராதா, பெங்களூர்**

உங்கள் மகனுக்கு 1.12.2006க்குப் பிறகு திருமணம் நடக்கும். சர்ப்பதோஷம் உள்ள ஜாதகமாகப் பார்க்கவும். சுக்ர தசையில் திருமணம் நடக்கும்.

உங்கள் பெண்ணுக்குப் பெயர் மாற்றம் செய்ய வேண்டும். 41 வயது வரை சனி தசை நடக்கும். புதன் தசையில் ஆரோக்கியம் நன்றாக இருக்கும்.

இருக்கும். எதிரிகள் சரணடைவார்கள். புதிய சொத்துகள் வாங்க நல்ல தருணம். குழந்தைகள் வழியில் மனசந்தோஷம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நலம்.

**மகரம்:** மேன்மையான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். புதிய தொழில் முயற்சி வெற்றி அளிக்கும். தெய்வபலம், ஆத்மபலம் கைகூடும். புண்ணிய மகான் சந்திப்பு ஏற்படும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். மனக்குழப்பம் தீரும். வியாபாரிகளுக்கு முற்போக்கான சூழ்நிலை ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். கல்வி வளம் மேலோங்கும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். சொத்துகள் கிரயம் ஆகும். திருமணக் காரியம் கைகூடும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வெளியூர் அழைப்பு கிட்டும். பணக் கஷ்டம் விலகும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்:** வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனை அளிக்கும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. ஜாமீன் போடக் கூடாது. வாகனத்தில் போகும்போது கவனம் தேவை. நெருங்கியவர்களிடம் மனஸ்தாபம் ஏற்படும். கூட்டுத்தொழில் செய்வோர் எச்சரிக்கையாக இருக்கவும். தடை விலகி திருமணம் நடக்கும். பணக்கஷ்டம் விலகும். அயல் நாட்டுப் பயணம் வெற்றி தரும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். மனைவியின் உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். சிலருக்கு வேலை மாற்றம் ஏற்படும். எதிர்ப்பு, தொல்லைகள் இருக்கும். நண்பர்களால் விரயம் ஏற்படும். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம்:** மன உளைச்சல் நீங்கும். அவசரம் காட்டக் கூடாது. உடல் நிலையில் கவனம் தேவை. கணவன் - மனைவி உறவில் விரிசல் ஏற்படும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். பணக் கஷ்டம் வராது. புதிய தொழில் முயற்சியைச் சற்றுத் தள்ளிப் போடவும். கல்வியில் கவனம் செலுத்தவும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். மறைமுக எதிரியால் தொல்லை உண்டு. வரவுக்கு மீறி செலவு ஏற்படும். குழந்தைகளால் மனச்சலனம் ஏற்படும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் கவனமாக இருக்கவும். பணக்கஷ்டம் தீரும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

செப்டெம்பர் 2006 ரூ.6/- மட்டுமே

# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!



## கலக்கும் கார்கள்!

- போஸ்டர்

## ஷேனோ

- புதிய படத்தொடர்





## காவல் நாய்களின் சாகஸங்கள்

- கவர் ஸ்டோரி



1000/- ரூபாய் பரிசுப் போட்டி

மேலும் பல புதிய பகுதிகள், கதைகள், புதிர்கள்...

● இறந்து போன பத்திரிகையாளர்கள் குடும்பத்துக்கு உதவித்தொகை வழங்கும் திட்டத்தின்படி,



# சந்தேகிக்கும் ம.தி.மு.க... சஞ்சலப்படும் பா.ம.க...

இருபது வருட காலம் பத்திரிகையாளராக பணிபுரிந்து இறந்தவருக்கு இரண்டு லட்சம் என்றும், ஐந்து வருடங்கள் பணிபுரிந்து இறந்துவிட்டால் ஐம்பதாயிரம் என்றும் தமிழக அரசு நிர்ணயித்திருக்கிறது. இதில் வேடிக்கை (வேதனை!) என்னவென்றால், ஐம்பது வருட காலத்துக்கு மேல் பத்திரிகையாளராக வாழ்ந்து மறைந்த சாவியை, ஐந்து வருடப் பிரிவில் சேர்த்து ஐம்பதாயிரம் கொடுத்திருப்பது தான்!



• சாவி

● ம.தி.மு.க. சட்டமன்றத் தலைவர் கண்ணப்பன் உடல்நலமின்றி மருத்துவமனையில் இருக்கிறார். அவரை ஆற்காடு வீராசாமியும் ஸ்டாலினும் போய்ப் பார்த்துவிட்டு வந்திருக்கிறார்கள்.

இதனை ம.தி.மு.க. வட்டாரம் கட்சியைப் பிளக்கும் முயற்சியாக சந்தேகம் கொள்கிறது. அண்மையில் ம.தி.மு.க.விலிருந்து விலகிய ஓர் அம்மையார்தான் இதற்கு மூலகாரணம் என்றும் சொல்லப்படுகிறது.

● துணை நகர விவகாரத்தில் கொஞ்சம் அதிகமாக ஆடிவிட்டோமோ என்று சஞ்சலப்படுகிறார்கள் பா.ம.க. பிரமுகர்கள்.

"ஜெ. எங்கள் நிலையை ஆதரித்து அறிக்கை விட்டவுடன், கலைஞர் கொஞ்சம் அடக்கி வாசித்துவிட்டார். தி.மு.க. கொஞ்சம் சங்கடப்பட்டுப் போயிருக்கிறது" என்று நம்மிடம் பேசிய பா.ம.க. பிரமுகர் ஒருவர், "அந்தச் சங்கடத்தைத் தீர்க்கும் விதமாகத்தான், ஐயா தோற்றுவித்துள்ள மக்கள் தொலைக்காட்சித் துவக்க விழாவில் கலைஞரைக் குளிர்வித்து விட்டோம்" என்கிறார்.

துணை நகர விவகாரத்தில் பா.ம.க. எதிர்ப்புக் கணையைப் பலமாக விட்டதற்குக் காரணம், குறிப்பிட்ட பகுதியில் நில புரோக்கர்களாகவும் ரியல் எஸ்டேட் நடத்துபவர்களாகவும் இருப்பது அவர்கள் கட்சியினர் தானாம். ஆக, கூட்டணி ஆளுங் கட்சியான தி.மு.க.வையே ஓர் உலுக்கு உலுக்கியிருக்கிறது பா.ம.க.!

- சஞ்சயன்

# பித்தப்பை அபாயம்!

தஞ்சாவூரைச் சேர்ந்தவர் மஞ்
ளா. கடந்த சில ஆண்டுகளாகவே இவ
க்கு நெஞ்சுவலி, மூச்சிரைப்பு போன்
வை அவ்வப்போது ஏற்பட்டு வந்தன.
சன்ற மாதம் இவற்றோடு வயிற்று
லியும் சேர்ந்து கொள்ள, நிலை
லைந்து போனார். மருத்துவமனை
ல் அனுமதிக்கப்பட்டு ஸ்கேன்
சய்து பார்த்தபோதுதான் தெரிந்தது-
ஞ்சுளாவுக்குப் பித்தப்பையில் கற்கள்
ருப்பது. அதுவும் ஒரு கல்லோ,
ரண்டு கற்களோ அல்ல.... இருநூறு
ற்கள்!

''பித்தப்பையில் முந்நூறு கற்கள்
ருந்தாலும் மூன்று கற்கள் இருந்தா
ம் இரண்டுமே ஒரே அளவு பாதிப்
பைத்தான் ஏற்படுத்தும்'' என்கிறார்
சன்னை பெருங்குடி, அடையாறு
ற்றும் கீழ்ப்பாக்கத்திலிருக்கும் லைஃப்-
லன் மருத்துவமனைகளின் தலை
ரும், குடல்நோய்கள் சிறப்பு
ருத்துவ நிபுணருமான டாக்
ர் ஜே.எஸ்.ராஜ்குமார்.
த்தக் கற்கள் பற்றி அவரி
ம் பேசியதிலிருந்து:

"பித்தப்பை என்பது குடல்வாலைப்
பான்றது. இது மனிதனுக்கு அதிகத்
தவையில்லாத ஓர் உறுப்பு. நாம் உண்
ம் கொழுப்பு உணவுகளைச் செரிக்க
தவும் பித்த நீரானது, கல்லீரலிலிருந்து
த்த நாளங்கள் வழியாக வரும்போது,
ந்தப் பித்தப்பையிலும் கொஞ்சம்
ரை விட்டுச் செல்லும். உணவுச் செரி
ானத்துக்கு பித்தநீர் நேராகக் குட
க்குச் சென்றாலே போதும்.
த்தப்பை என்பது கூடுகிற
றுப்புதான்.

சரி, பித்தப்பையில் கற்கள் எவ்வாறு உண்டாகின்றன? பித்தநீரில் கொலஸ்ட்ராலின் அளவு மிகுந்து, பித்த அமிலங்களின் துணையோடு தோன்றும் பித்த உப்புக்களின் அளவு குறைந்து போனால், அது கொலஸ்ட்ரால் கற்கள் பித்தப்பையில் உருவாக முக்கிய காரணமாக அமைந்துவிடும். அதேபோல் உடலுக்குக் கேடு விளைவிக்கும் கிருமிகள் உடலுக்குள் நுழைந்து, பித்தப்பையை அடைத்து, பித்தநீரின் வழியாக வெளிப்படலாம். இது பித்தநீர்க் குழாய்களிலும், பித்தப்பையின் உட்பகுதிச் செல்களிலும் பாதிப்பை ஏற்படுத்தும். இதன் காரணமாக உட்பகுதி



சொரசொரப்புத் தன்மை ஏற்பட்டு, பித்தக் கற்களை உண்டாக்கி விடும்.

பித்தநீர் முறையாக வெளியேற முடியாதபடி தடை ஏற்பட்டாலும் பித்தக் கற்கள் எளிதில் தோன்றிவிடும்.

இது யாருக்கெல்லாம் உண்டாகும் தெரியுமா? கருத்தடை மாத்திரைச் சாப்பிடுபவர்களுக்கு, கருவுற்ற பெண்களுக்கு, கொழுப்புச் சத்துள்ள உணவுகளை அதிகம் உட்கொள்பவர்களுக்கு, உடல்



**"கொழுப்பைத் தவிர்த்தாலே போதும்!"**

• டாக்டர் ஜே.எஸ். ராஜ்குமார்

பருமனாக இருப்பவர்களுக்கு, சிறுகுடல் பாதைகளில் நாள்பட்ட வியாதி கண்டவர்களுக்குப் பித்தக் கற்கள் உண்டாகும் வாய்ப்பு உண்டு.

பித்தக் கற்கள் உண்டாகியிருப்பதை அறிகுறிகள் மூலமே உணரலாம். மார்புக்கூட்டின் தட்டை எலும்புகளுக்கு இடையே உண்டாகும் வலி, மாரடைப்பு போலத் தோற்றமளிக்கும். வயிற்று வலியும் இருக்கும். குமட்டல், வாந்தி ஏற்படும். அஜீரணம் ஏற்பட்டு சாப்பிடப் பிடிக்காது.

பித்தக் கற்கள் அளவைப் பொருத்து உடலில் பலவித பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன. கல் 1 செ.மீ. விடப் பெரிதாக இருந்தால் பித்தப்பையில் வீக்கம் ஏற்படும். 3 செ.மீக்கு மேல் இருந்தால் பித்தப் பையில் புற்றுநோய் தோன்ற வாய்ப்பு உண்டு. ½ செ.மீக்கும் கீழான கற்கள், கீழே இறங்கும்போது சமயத்தில் வழி தவறி வே எங்காவது போய்விட்டால் கணையத்தி வீக்கமும், அடைப்பு சம்பந்தமா மஞ்சள் காமாலையும் ஏற்படும். கணையம் வீக்கமானால், கணையத்திலிருந் சிறுகுடலுக்குச் செல்ல வேண்டிய செ மானத்துக்கான கணைய நீரைச் செல் விடாமல், கணையத்தின் வா அடைத்து, 'Piliary pangreaties' என்னு உயிருக்கு ஆபத்தான நோயை உண்டா கும்.

பித்தக் கற்கள் உள்ள நோயாளிக பொதுவான அறிகுறிகள் தெரிந்தவுட சிகிச்சை செய்துகொள்வது நல்லது. ஆரம்பகட்ட பித்தக் கற்களை மருந்துக மூலமே கரைத்துவிடலாம். நீண்ட நா களுக்கு மருந்துகள் எடுத்து கொள்ள வேண்டியிருக்கும். நாள்பட் பித்தக் கற்களை நீக்க இப்போதெ லாம் நவீன சிகிச்சைகள் வந்துவிட்ட கத்தியால் கிழி அறுவை சிகிச்சை செய் தெல்லாம் அந்தக் காலம். 'ஹார்மோனி சியர்' எனப்படும் சிகிச்சை முறை யில் அதிக இரத்த சேதாரமின் ஊசியைக் கொண்டு குறிப்பிட் பகுதியில் சிறுசிறு துளைகளிட் கற்களை மட்டும் நீக்கிவிட முடியு ERCP என்னும் நவீன முறை மூலம் வா வழியே குழாயைச் செலுத்தியும் பித்த கற்களை வெளியேற்றலாம். இவற்றை செய்து கொண்ட அடுத்த நாளே வீட்டு குத் திரும்பி, தங்களுடைய அன்றாட பணிகளை ஆரம்பிக்கலாம்.

எல்லாவற்றுக்கும் மேல் பித்தப்பை அழுகிப்போன நிலையை எட்டிவி டால், அறுவை சிகிச்சை மூலம் அகற் விடுவது உத்தமம். இதனால் உடலுக் எந்தப் பிரச்னையும் ஏற்படப் போ தில்லை.

பொதுவாக கொழுப்பு நிறைந் உணவுகளைத் தவிர்க்க ஆரம்பித்தாலே பித்தப்பை கற்களின் பிரியத்தில் இருந்து முழுமையாக விடுபட்டு விடலாம்'' என்கிறார் டாக்டர் ஜே.எஸ். ராஜ்குமார்

- **விக்டர் மனோ**

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**

# சவாலே சமாளி!

சுதந்தரம் கிடைக்கச் சரியாக நாற்பது
ண்டுகளுக்கு முன்னால், இரண்டு லட்ச
பாய் டெபாசிட்டும், ஒரே ஒரு கிளையு
சுத் துவங்கப்பட்ட இந்தியன் வங்கிக்கு,
ன்று நாற்பதாயிரம் கோடி ரூபாய்
டபாசிட்; ஆயிரத்து நானூறு கிளைகள்!
இந்தியன் வங்கியின் நூற்றாண்டு
மா கொண்டாட்டங்களில் கலந்து
காண்டு பேசிய குடியரசுத் தலைவர்
ப்துல் கலாம், இருபது ஆண்டுகளில் இந்
யன் வங்கி இன்னும் என்னென்ன
சய்ய வேண்டும் என்று ஒரு
ட்டியலே போட்டுக்
காடுத்துவிட்டார்!

- தேசிய மேம்பாட்டுத்
ட்டங்களில் பங்குகொள்ள
வண்டும்.
- நாடு முழுக்கக் கிளை
ள் இருக்க வேண்டும் -
றிப்பாக கிராமப்புறங்களில்.
- வணிக ஆர்வமுள்ள
ளைஞர்களுக்குக்
கடன்கொடுத்து வளத்தைப்
பருக்க வேண்டும்.
- சுய உதவிக் குழுக்கள்
கிராமப்புறங்களின் பொருளா
ர மேம்பாட்டுக்கு மிகவும் அவசிய
ானவை என்பதால், அவற்றுக்குத்
தொடர்ந்து ஆதரவு அளிக்க வேண்டும்.
- வருகிற மூன்று ஆண்டுகளுக்குள்,
குறைந்தபட்சம் ஐம்பது லட்சம் விவசாயி
களுக்கு உதவ வேண்டும்.
- வங்கிக் கிளைகளின் எண்ணிக்கை,
ன்று ஆண்டுகளில் இரண்டாயிரத்தை
ட்ட வேண்டும்.
- கிராமப்புறங்கள் செழிப்படைய,
யோ ஃப்யூயல் திட்டம், கடல்பாசிப்
பண்பாட்டுத் திட்டம், உணவுப் பதப்படுத்
ம் திட்டம் என்று கிராமப் பொருளா
ரம் சார்ந்த திட்டங்களில் அக்கறை
ட்ட வேண்டும்.

தாம் கொடுத்த இந்தப் பட்டியல் இந்
யன் வங்கியின் தலைவருக்கும், அதிகாரி
களுக்கும் ஊழியர்களுக்
கும் பெரிய சவாலாக இருக்கப்
போகிறது என்று எண்ணி விடக்கூடாது
என்பதற்காகத்தானோ என்னவோ, இந்
தியன் வங்கி சோதனையான கட்டங்களில்
இருந்து வெற்றிகரமாக மீண்டு, தன்
முதன்மை இடத்தை நிலை நாட்டிய செய
லைப் பாராட்டினார் கலாம்.

'பொதுமக்களின் வங்கி' என்ற நல்ல
பெயரை வாங்க வேண்டும் என்னும்
குறிக்கோளை அவர் வலி
யுறுத்தியபோது, 'பொதுமக்களின் திருப்தியைச்
சம்பாதித்துக்கொள்ள வேண்டும்' என்ற
அறிவுரைதான் வெளிப்பட்டது.



'பொதுத்துறை வங்கிகளின் ரத்
தினம் இந்தியன் வங்கி' என்றார் மத்திய
நிதி அமைச்சர் ப. சிதம்பரம். மாநில நிதி
யமைச்சர் பேராசிரியர் அன்பழகனுக்குப்
பதிலாக, உயர்கல்வித்துறை அமைச்சர்
பொன்முடி விழாவில் கலந்து கொண்டார்.

அடையாறு புற்றுநோய் மருத்துவ
மனைக்கு ஒரு கோடியே ஐம்பது லட்சம்
ரூபாய் நன்கொடை வழங்கியது, டாக்டர்
சாந்தாவின் சேவையைப் பாராட்டுவது
போல அமைந்தது. காஞ்சிபுரம் மகாலட்
சுமி சுய உதவிக் குழுவுக்கும் குடியரசுத்தலை
வர் விருது அளித்துப் பாராட்டினார்.

**- சாருகேசி**

• ச.இராசன், திருச்சி

? மனை பிரிப்பு, கட்டட விதிமுறைகளை மீறி அப்பாவி பொதுமக்களை ஏமாற்றிய கட்டுநர்களை விட்டுவிட்டு, கண்டும் காணாமலிருந்த அதிகாரிகளை விட்டுவிட்டு, கடன் வாங்கி வீட்டை வாங்கிய பொதுமக்களை, அந்த வீடுகளை இடிப்பதன் மூலம் தண்டிப்பது சரியா?

! கட்டுநர்கள், அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுத்து நீதிமன்றத்தில் நிறுத்த வேண்டியது அரசின் கடமை. மறுக்கவே முடியாது. ஆனால் வீட்டை வாங்குவதற்கு முன் ஏமாந்துபோகாமல் இருக்கிறோமா என்று அனைத்து நிலைகளிலும் கவனம் செலுத்த வேண்டிய கடமை மக்களுக்கும் உண்டு.



• பாட மறந்தது...!

• இரா.சாந்த குமார், திருவள்ளூர்

? புதிதாக மாநிலங்கள் – மாவட்டங்கள் அமைக்கப்படுவதால் அப்பகுதி மக்களின் வாழ்க்கை வளம் பெற்று விடுமா?



• புஸ்வாணம் சிதறியது!

! பலருக்குப் புதுப் பதவிகக வளம் கிடைக்கும்; லஞ்ச – ஊழல் வளம் பெறும்; அரசுக்குச் செலவுகள் அதிகரிக்கும். மக்களின் வாழ்க்கை வளமா..? அது குறித்து யாருக்கு அக்கறை!

**☐ ரூ.100/- பரிசு பெறுபவர்:**

**எம்.ராஜேந்திரன்,**
**2, வரதராஜ நகர் விரிவு,**
**லால்குடி - 621 601**

• அ.யாழினி பர்வதம், சென்னை - 1.

? சட்டசபை கூடியதற்காக, எம்.எல்.ஏ.களுக்கு ஐந்து நட்சத்திர ஹோட்டலில் விருந்து தருவது அவசியமா?

! வரி செலுத்துவோர், இதையெல்லாம் கூட ஜீரணிக்கத் தயார். ஆனால் ஏழு நட்சத்திர ஹோட்டலில் நடைபெறும் மாநாடுபோல், கண்ணியம் காக்கப்பட வேண்டிய சட்டமன்றத்தை, குப்பத்து குழாயடிச் சண்டைக் களமாக மாற்றுவதைத்தான் ஜீரணிக்க முடியவில்லை.

• ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? சீக்கிய மண்ணை மன்னித்ததுபோல் தமிழ் மண்ணின் பிழைகளையும் மன்னியுங்கள் என சோனியா காந்திக்கு வைரமுத்து வேண்டுகோள் விடுத்துள்ளாரே?

! பேச்சுவார்த்தைக்கு முன்வந்து, ஆயுதங்களுடன் சரணடைந்த சீக்கியரைப் போல பிரபாகரனையும் சரணடைய அவர்

# பாரதிராஜா

கவிதை பாடி அழைக்கட்டும் முதலில்.

• டி.கே.சுப்ரமணியன், திருப்பரங்குன்றம்

? துணை நகர திட்டம் கைவிடப்பட்டது முதல்வருடைய ராஜ தந்திரத்தைத்தானே குறிக்கிறது?

! மைனாரிட்டி அரசின் முதல் தோல்வி. அதற்குப் பெயர் ராஜ தந்திரம் என்றால் மைனாரிட்டி அரசு அமைத்தது ராஜ தந்திரமா என்ற கேள்வி எழும்.

• கே.வி.ராமன், சென்னை - 73

? இயக்குநர் ரிஷிகேஷ் முகர்ஜியின் மறைவு குறித்து...?

! ஹிந்திப் பட உலகில் மெல்லுணர்வு

ளுக்கும் யதார்த்தத்துக்கும் கவி
பத்துக்கும் முக்கியத்துவம் அளித்த
ரு முக்கியமான அத்தியாயம் முடிஞ்சு
பாச்சு!

என். சண்முகம்,
ருவண்ணாமலை

காவல் துறையி
ருக்கு ஏராளமான
லுகைகளை முதல்வர்
லைஞர் அறிவித்தது
ற்றி?



• கௌரவம் பறந்தது!



• தலைகுனிவானது!

● லெ.நா.சிவகுமார்,
சென்னை-33

? ஐந்தாயிரம் பங்குதாரர்களுடன் 'மக்கள் தொலைக்காட்சி' என்னும் சேனலைத் துவக்கியுள்ளாரே பா.ம.க. ராமதாஸ்?

! திரைப்படங்கள் ஒளிபரப்பப்பட மாட்டா என அறிந்தும் ஐயாயிரம் பேர் இதில் முதலீடு செய்துள்ளது பாராட்டுக்குரியது. கட்சி அபிமானம் காரணமாக முதலீடு செய்திருக்கக்கூடும். கட்சியின் குரலாக மாறிவிடாமல், மாற்றுக் கருத்துகளுக்கும் இடமளித்து, மக்கள் நலத் தொலைக்காட்சியாகச் செயல்பட்டு, சாதிக்க வாழ்த்துவோம்.



## ரபாகரன் சந்திப்பு குறித்து...?

● வி.ஆர்.கிருஷ்ணன், தஞ்சாவூர் ✱

? தேசிய, சர்வதேச விருதுகள் பெறும் தமிழ்த் திரைப்படங்களுக்கு ஊக்கத்தொகை தரப்போகிறார்களாமே?

! தரட்டும்; நல்லதுதான். ஆனால், ஒரு

அமைச்சர்கள், எம்.பி.க்கள், எம்.எல்.
.க்கள் உள்பட எல்லாருக்கும்தான்
ம்பளமும் சலுகைகளும் கூடிக்
காண்டே போகின்றன. அதைப் பற்றி
ாருக்கும் வருத்தமோ, வயிற்றெரிச்சலோ
டையாது. அப்படி அள்ளிக் கொடுத்த
றகும் லஞ்ச - ஊழல் நாடெங்கும்
திகரிக்கிறதே, அதுதான் மக்களை
த்திரம்கொள்ளச் செய்கிறது.

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:
வி.ஆர்.கிருஷ்ணன்,
1990, சட்டயப்ப வாத்தியார் சந்து,
மானோஜியப்ப வீதி,
தஞ்சாவூர் - 613 009

விஷயம் புரியவில்லை. திரைப்படத் துறைக்கு மட்டும் ஏன் தொடர்ந்து இவ்வளவு கவனிப்புகள்? எத்தனையோ கலைத்துறைகள் அடுத்த வேளை ஆகாரத்துக்கு வழியின்றி சவலைப் பிள்ளைகளாக இருக்கின்றன. அவற்றையும் சற்றுக் கவனிக்கலாமே!

● **பி.எஸ்.பேச்சி, ஆத்தூர்(தெற்கு), தூத்துக்குடி மாவட்டம்**

***? இயக்குநர் வஸந்த், நாவல்களைப் படமாக்கத் தீர்மானித்துள்ளாரே?***

! நல்ல முயற்சி. தாதாயிசப் படங்கள் தமிழ் சினிமாவை இருட்டு மூலைக்குள் தள்ளிக் கொண்டிருக்கும் சூழலில், வஸந்த் போன்றவர்களால் அது மீட்கப்பட்டால் மகிழ்ச்சியே. வெற்றி பெற்றால் டபுள் மகிழ்ச்சி. அதற்கு முக்கியமாக, நாவல் – அஸ்திவாரம்; ஸினாரியோ – ஸ்க்ரிப்ட் அழகான கட்டடம் என்பது உணரப்பட வேண்டும்.



• அத்தியாயம் முடிந்தது!



• தொலைக்காட்சி பிறந்தது!

● **எம்.ராஜேந்திரன், வால்குடி**

***? விநாயகச் சதுர்த்தி அன்று டாக்டர் வடிவிலெல்லாம் அவர் சிலையை வடிப்பது சரியா?***

! இறைவனைப் பலவிதமாக அலங்காரம் செய்து பார்ப்பது நமது மரபு. கண்ணனுக்கு யசோதை அலங்காரம் செய்தது போல வாத்ஸல்யத்துடன் செய்ய வேண்டும். 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி, விநாயகர் கையில் கல்கி புத்தகத்தைக் கொடுத்து கல்கி வாசகர்களுக்கும் அ... வழங்கச் செய்தார். இதுபோன்ற அழ... கற்பனைகள் வரவேற்கத்தக்கவை. ... வமைப்பு எல்லோரும் ஏற்கத்தக்கத... இருக்க வேண்டும்; நமது தனிப்பட... விருப்பு வெறுப்புகளை விநாயகர் வடி... ஏற்றக்கூடாது. அது ஆபத்து!

● **அ.சுகுமார், காட்பாடி**

***? பாரதிராஜா, விடுதலைப் புலிகள் ... பாகரனைச் சந்தித்து வந்துள்ளது பற்...***

! சென்றார், பார்த்தார், திரும்பின... அவ்ளோதான்! ஈழத்தில் அமைதி ம... என்ன செய்தார்? பிரபாகரனின் ப... மாற்றத்துக்கு இம்மி அளவேனும் ... கண்டாரா? புஸ்வாணம்தான்!

● **ஜோ.ஜெயக்குமா... நாட்டரசன்கோட்...**

***? 'சட்டசபை நிகழ்... கள் எதுவும் என... நிறைவைத் தரவில்ல... என்றும் 'உள்ளாட்... தேர்தலில் தனித்... போட்டி' என்... விஜயகாந்த் அறிவித்... ளாரே?***

! நிறைவைத் தரவில்ல... என்றால் யார் யாரு... ஏன் தரவில்லை, என... யோசிக்க வேண்டு... அப்படி யோசித்த... மறுபடி தனித்... போட்டி என்ற முடிவு மாறக்கூடும்.

● **எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்...**

***? 'துணை'யை இப்படிக் கொச்சை... படுத்தியது சரியா?***

! சேச்சே! ஒரு முன்னாள் முதல்... இன்றைய எதிர்கட்சித் தலைவர் இ... விடக் கேவலமாகப் பேசியிருக்க மு... யாது என்ற அளவுக்குப் போய்விட்ட... ஜெயலலிதா. தலைவியே இப்ப... பேசினால், தொண்டர்கள் என்னத... பேசமாட்டார்கள்? கருணாநிதிய... கோபம் நியாயமானது என்றாலு... அவரும் எல்லை மீறிவிட்டார். தமிழ... வெட்கித் தலைகுனிகிறது.

நாடகத்தில் பெண்ணாக நடித்த பையனுக்கு மாலைபோட மணிரையும் அனுமதிக்கவில்லை. கடைசிக் காட்சி அரபு வேஷக்கும், துப்பியும் சிங்கமும் சண்டைபோட, கடத்தப்பட்ட ம்மா, கண்ணாம்பாள் வசனம் பேச, தாயைக் ண்ட பெண்கள் அம்மை நோக்கி ஓடிவர,



அவரு 'நூர்ஜஹான்'னா வருவாரு பாருங்க... அத்தனை அழகா இருப்பாரு... அந்தக் கண்கள்ல அப்படி ஒரு ஒளி இருக்கும்" என்றார்.

"இத மறந்துட்டீங்களே... 'மானவிஜயம்'னு நாடகம் எழுதினாரே பரிதிமாற் கலைஞர், அதாங்க நம்ம

# சுந்தரம் ஹோட்டல் இட்லி... தோசை!

மாலை போட வந்தவர்கள் மேடைக்குள் வர, யாருக்கு யார் மாலை போட்டார்கள் என்று இன்றுவரை எனக்கு நினைவில்லை. நாடகம் முடிந்த பிறகு, முன்னிரவில், நிலவு வெளிச்சத்தில் அனைவரும் சுற்றி அமர, முத்துராக்கு 'சுந்தரம் ஹோட்டல்' இட்லி, தோசைகளைப் பரிமாற, எல்லோரும் நாடகத்தின் வெற்றியைப் பாராட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஆற்று மணலில் அனைவரும் வட்டமாக அமர்ந்து, நிலா வெளிச்சத்தைத் தோசைக்குத் தொட்டுக்கொண்டு, சிரித்துச் சிரித்துப் புரையேறி மகிழ்ந்த நாட்கள் யாருக்கும் இரும்பக் கிடைக்காதவை.

சாப்பாடு முடிந்த பிறகு பேச்சு ஆரம்பமாயிற்று. எப்போதும் போல முத்துராக்கு தொடங்கினார்.

"தம்பிகளா... ஆண்கள் பெண் வேஷம் போட்டு நடிக்கிறது நம்ம நாட்டு வழக்கம் தான். நம்ம நடிகர் திலகம் சிவாஜி கணேசன், அந்தக் காலத்தில் நாடகத்தில் அதிகமாப் பெண் வேடம்தான் போட்டிருக்காரு. நானே, திண்டுக்கல் நாடகத்திலே பார்த்திருக்கேன். சக்தி நாடகக் குழுவில் சூரியநாராயண சாஸ்திரி... அவரே தன்னோட நாடகத்தில் பெண்வேடம் ஏற்று நடிச்சிருக்காராம். நான் ஒரு புத்தகத்திலே படிச்சேன்" என்றான் மணி.

"அதுமட்டுமில்லை, அந்தக்கால நடிகைகள்ல நம்ம எம்.என்.ராஜம் இருக்காங்க பாருங்க... அவங்க அழகுக்கும், தமிழ் உச்சரிப்புக்கும் ஈடு இணை கிடையாது. காரணம் என்ன தெரியுமா? ஏழு, எட்டு வயசிலேயே அவங்கெல்லாம் நாடகத்தில் நடிக்க வந்து கத்துக்கிட்டதுதான். 'சிவகங்கைச் சீமை' படத்தில் நம்ம பி.எஸ். வீரப்பா மனைவியா வந்து வசனம் பேசுவாங்க பாருங்க, என்ன அருமை தெரியுமா?" என்று முத்துராக்கு சொல்ல, "ஏன், 'மகாதேவி' படத்திலே இதே ஜோடி வெளுத்து வாங்குமே ஞாபகம் இல்லையா?" என்றான் மணி.

இந்த இரண்டு பேரில் யாருக்கு வயது அதிகம் என்று நான் யோசித்தேன். இப்

கு.ஞானசம்பந்தன்

படி இவர்கள் புகழ்ந்து பேசிப் பாராட்டும் நடிகை எம்.என்.ராஜம் அவர்களை நான் சந்தித்ததும் சுவையான நிகழ்ச்சி!

**எ**ம்.என்.ராஜம் அவர்களையும் அவரது கணவர் பிரபல பாடகர் ஏ.எல்.ராகவன் அவர்களையும் அமெரிக்காவில் 'பெட்னா' தமிழ் மாநாட்டில் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

முதல் நாள் வந்திருந்த விருந்தினர் அனைவருக்கும், சிறந்த விருந்து தந்து மகிழ்ந்தனர் அமெரிக்கத் தமிழ்ச் சங்கத்தினர். அவ்விருந்தில் எம்.என்.ராஜம்-ராகவன் தம்பதியினருக்கு அருகில் சென்று அமர்ந்த நான், என்னை அறிமுகம் செய்யத் தொடங்கியவுடன், "நல்லா இருக்கு, நீங்க உங்களைப் பத்திச் சொல்றது. நாங்கதான் தினமும் உங்களை டீ.வி.யில பார்த்துக்கிட்டே, உங்க பேச்சைக் கேட்டுக்கிட்டே இருக்கோமே!" என்று மலர்ந்த முகத்தோடு பேசத் தொடங்கினார்கள் இருவரும்.

நான் சிறுபிள்ளையாக இருந்த காலத்தில் பார்த்து ரசித்த படங்களையும் ஏ.எல்.ராகவனின் பாடல்களையும் சொல்லத் தொடங்கினேன்.

"முதல்ல உங்ககிட்ட ஒரு கேள்வி கேட்கணும், 'நல்லதம்பி' படத்தில் டி.ஏ. மதுரம் அம்மையாரோடு ஒரு பாவாடை சட்டை போட்டு ஒத்த சடையோடு ஒ சின்னப் பொண்ணு வருமே அது நீங் தானே?" என்று நான் எம்.என்.ராஜ அவர்களிடத்தில் கேட்டேன்.

"அட... சரியாச் சொல்லீட்டிங்கபே அது நான்தான். ஆனா அதுக்கு முந்தி நிறைய நாடகங்கள்ல நடிச்சிருக்கே" என்றார் சிரித்தபடி.

"அதேபோல, 'நெஞ்சில் ஓர் ஆலய படத்தில் 'எங்கிருந்தாலும் வாழ்க'ன் சோகப் பாட்டை அருமையாப் பா னீங்க. அந்தப் பாணியைச் சடார் மாத்தி பல படங்கள்ல 'நாகேஷ்' சாருக் காமெடிப் பாட்டுப் பாடி இருக்கீங் 'அம்மா எங்கே' படத்தில் நீங்க பாடி 'பாப்பா பாப்பா கதை கேளு...' பாட்டு நடிகவேள் எம்.ஆர்.ராதா அவர்களுக்கு பாடின 'புத்திசிகாமணி பெற்ற பிள்ளை புன்னகை செய்யுது சின்னப்புள்ள' பா டும் இன்னிக்கும் மறக்க முடியாத இனி கானங்கள்" என்றேன்.

**ம**றுநாள் மூவாயிரம் பேர் நிறை 'டிரென்டன்' நகரக் கலையரங்கில், அ போதைய 'பெட்னா' தமிழ்ச் சங்கத் தலை வர் திரு.சிவராமன் அவர்கள், திரு எம்.என்.ராஜம், ராகவன் தம்பதியின



# PUBLIC NOTICE

NOTICE is hereby given that, I am not connected or associated in any manner whatsoever in the business namely business of food products under the brand name of **"PHOENIX INDIA"** or any other brand name promoted or being promoted by my second son Sri. Nalli Viswanath.

Notice is also hereby given that, I am in no way connected or associated with any other business/(es), present and future that may solely belong to and/or are promoted by Sri. Nalli Viswanath son of Sri. Nalli Kuppuswami Chetti, and/or his associates.

**NALLI KUPPUSWAMI CHETTI**
*PARTNER*
**NALLI CHINNASAMI CHETTY**
9,Nageswaran Road,
T. Nagar, Chennai - 600017.

**CHENNAI**
**16.08.2006**

---

மேடைக்கு அழைத்து 'வாழ்நாள் சாதனை யாளர்' விருதினை வழங்கிக் கௌரவித்த போது, அத்தனை பேரும் எழுந்து நின்று கைதட்டி மரியாதை செய்த நிகழ்ச்சி மறக்க முடியாத வரலாற்று நினைவாகும்.

என்னையும் மேடைக்கு அழைத்து அதே கரகோஷத்துடன் வாழ்த்துச் சொன்னபோது, மிக மகிழ்வான நேரமாக எனக்கு அந்த நேரம் தோன்றியது. என் இனிய நண்பர்களான சினிமா மணியும், முத்துராக்கும் இந்த நேரம் இங்கே இல்லாமல் போய்விட்டார்களே என்று நினைத்தேன்.

**'வி**டாதே பிடி' நாடகம் எங்களுக்குக் கிடைத்த மற்றொரு வெற்றி நாடகம்!

ஒருநாள் காலை முத்துராக்கு எங்கள் ஊரில் இருந்த ஒரு பெரியவரைக் காண அழைத்துச் சென்றார். "தம்பி நாம இப்பப் பாக்கப் போறமே, அவரு ஒரு காலத்தில் நாடகத்திலும் சினிமாவிலும் பேரும் புகழும் பெற்றவரு. கொஞ்சம் நொடிச்சுப் போனாரு. ஆனா அவரு வச்சிருக்கிற புத்தகங்களும், சீன், செட்டிங்குகளும் பெரிய பொக்கிஷம்" என்று சொல்லிக் கொண்டே கூட்டிப் போனார்.

வைகை ஆற்றங்கரையோரத் தென்னந் தோப்புகளுக்கு மத்தியில் பழமை யான ரெட்டை மாடிக் காரை வீடு ஒன்று இந்தக் கால பங்களா டைப்பில் கம்பீர மாகக் காட்சியளித்தது. அந்த வீட்டின் முன்புறம் அருமையான வட்ட வடிவி லான களம், (நெற்கதிர் அடிக்கும் இடம்), சாணம் தெளிக்கப்பட்டு ஒருவித பசுமை யான மஞ்சள் நிறத்தோடு 'ஜில்லென்று' குளுமையாக எங்களை வரவேற்றது.

உயரமான இரண்டு பக்கத் திண்ணை களில் பர்மாத் தேக்குமரத் தூண்களும், உத்திரங்களும் சித்திர வேலைப்பாட் டுடன் செதுக்கப்பட்டிருந்தன.

நாங்கள் ஒரு பக்கத் திண்ணையில் பயத்தோடு அமர்ந்தோம்.

சற்று நேரத்தில் உள்ளிருந்து அவர் வந்தார். வந்தவர் யார் தெரியுமா?

**(ரீல் சுற்றும்)**

இந்தியர்கள் அனைவரும் கட்டாயமாக வந்தே மாதரம் பாட வேண்டுமென்று ஏன் வலியுறுத்துகிறீர்கள்? முஸ்லிம்கள் கூறும் மத ரீதியிலான காரணத்தை ஏன் நீங்கள் ஏற்க மறுக்கிறீர்கள்? இந்தக்



# "அச்சத்தைப் போக்குங்கள்!"

கேள்வியை பாரதிய ஜனதா கட்சியின் துணைப் பொதுச் செயலாளர் இல.கணேசன் முன் வைத்தோம்.
அவர் தரப்பு வாதம் இது:

"தேசம் என்பதற்கு ஒரு தேசியத் தன்மை தேவை. எது ஒரு நிலப்பரப்பில் வாழும் மக்களை ஒன்றுபடுத்தி வைக்கிறதோ, அதுதான் தேசியத்தன்மை. இந்த தேசத்தில் இமயம் முதல் குமரிவரை வாழும் மக்கள் ஒன்றுபட்டு இருப்பதற்கு மொழியோ, உடையோ, வழிபாட்டு முறைகளோ காரணமல்ல. இந்த தேசத்தின் தேசியத்தன்மைக்கு அடித்தளம் மதம் இல்லை; பண்பாடுதான். அது பாரத தேசத்தின் மைந்தர்கள் அனைவருக்கும் பொது - அவர்கள் எந்த மதத்தைப் பின்பற்றினாலும் சரி.

பண்பாடு என்பதை விளக்க எத்தனையோ சிறப்பு அம்சங்கள் உண்டு. உதாரணமாக, இந்த தேசத்து மக்கள் எதையுமே தாயாக பாவிப்பவர்கள். நதி தாய்; மொழி தாய்; சக்தி தாய். உலகத்திலேயே மண்ணை தெய்வமாகக் கருதும் பண்பாடு நம்முடையது மட்டுமே. மற்ற நாட்டவர்கள் தம் நாட்டை 'தந்தையர் நாடு' என்று போற்றும்போது, நாம் 'தாய்நாடு' என்று போற்றுகிறோம். 'வந்தே மாதரம்' என்றால், பாரதத் தாயை வணங்குகிறோம் என்று பொருள்.

மாவீரன் பகத்சிங் தூக்கிலிடப்படுவதற்கு முன் உச்சரித்த வார்த்தை வந்தே மாதரம்; வ.உ.சி. செக்கிழுத்தபோது பட்ட சவுக்கடிகளுக்கு மருந்தாக அமைந்த சொல் வந்தே மாதரம்; திருப்பூர் குமரன் மூவண்ணக் கொடியைக் காக்க அடி வாங்கியபோது சொன்ன வீரச் சொல் வந்தே மாதரம். 'சுதந்திரப் போராட்டத்தில் போலீசாரின் ஒன்றிரண்டு தடியடிகளையே தாங்க முடியாதவர்கள் கூட, அடிக்கு அடி வந்தே மாதரம் என்று மீண்டும் மீண்டும் சொல்லி, தடியடியை ஏற்றார்கள்' என்று தமது புத்தகத்தில் குறிப்பிடுகிறார், ம.பொ.சி.

எங்கள் மதம், தேசத்

'வந்தே மாதரம்' பாட வேண்டும் என்பதை எதற்காக எதிர்க்கிறீர்கள்? ஒரு தேசியப் பாடலுக்கு மதச்சாயம் பூசுவது சரியா?' என்று தமிழக முஸ்லிம் முன்னேற்றக் கழகத் தலைவர் எம்.ஹெச்.ஜவஹருல்லாவைக் கேட்டோம். அவர் தரப்பு வாதம் இதோ:

மண்ணை மட்டும் தேசியம் என்பதை ஏற்றுக்கொள்ள முடியாது

தைத் தாயாகப் பாவிப்பதை ஏற்காது என்று ஒரு மதத்தவர் சொல்வது ஏற்கத்தக்கது அன்று. தமிழகத்தில், தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடுவதும் இதே கண்ணோட்டத்தில்தான். 'நாங்கள் தமிழ்த்தாயை மதிக்க மாட்டோம்' என்று இவர்கள் சொல்வார்களா?

'எங்களுக்கு உருவ வழிபாட்டில் நம்பிக்கை இல்லை. அதனால்தான் நாங்கள் எதையும் உருவகப்படுத்த விரும்பவில்லை' என்கிறார்கள். அப்படியானால், இஸ்லாமிய நாடுகள்கூட தங்கள் தேசத்துக்கு ஒரு தேசியக் கொடியை வைத்துப் போற்றுகிறார்களே! பாரத நாட்டு முஸ்லிம்கள் தேசியக் கொடியை ஏற்க மாட்டோம் என்று சொல்வார்களா?

அமெரிக்க நாட்டிலோ, சீன நாட்டிலோ அல்லது பிற நாடுகளிலோ குடியுரிமை பெற்ற முஸ்லிம்கள்கூட அந்த நாட்டு தேசியக் கொடிக்கும், தேசிய கீதத்துக்கும் மதிப்பு தருகிறார்கள். ஆனால், இங்குள்ள முஸ்லிம்கள் இந்த நாட்டிலேயே பரம்பரை பரம்பரையாக வாழ்பவர்கள். இந்தப் பண்பாடு அவர்களுக்கும் உரியது.

'வந்தே மாதரம்' பாடலைப் பாடக்கூடாது என்று அன்று எதிர்ப்பு தெரிவித்தார்கள். காரணம் இந்த தேசம்



வேற்றுமையில் ஒற்றுமை என்பதே நம் நாட்டின் தனிச்சிறப்பு.

விடுதலைப் போராட்ட காலத்தில் வெள்ளையர்களை விரட்டி அடிக்க இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், சீக்கியர் என்று அனைவரும் தோளோடு தோள் நின்று பாடுபட்டோம். அப்போது அவரவர் மத நம்பிக்கைகளைப் பின்பற்றுவதற்கு எந்தவிதமான அச்சுறுத்தலும் இல்லை. நேதாஜியின் இந்திய தேசிய ராணுவத்திலும், அவர் அமைத்த அரசிலும் முஸ்லிம்கள் பெரும்பங்காற்றியுள்ளனர்.

விடுதலைப் போராட்ட காலத்தில், கதராடை அணிவது வெள்ளையருக்கு எதிரான ஒரு புரட்சி சின்னம். தன் கையால் ஓர் ஆடையை நெய்து, அதனை காந்திஜிக்கு அணிவிக்கும்படி அலி சகோதரர்களின் தாய் பீயம்மா அளித்தார். இதையடுத்துதான் கதர் அணிவது

# "அடிப்படையைத் தகர்க்காதீர்கள்!"

கலை மகளாகவும், மலை மகளாகவும் அலை மகளாகவும் அந்தக் கீதத்தில் வர்ணிக்கப்படுகிறது என்றார்கள். அன்றைய பல வினமான தலைவர்கள் அதை ஏற்று, பாட்டின் அப்பகுதிகளை நீக்க சம்மதம் தெரிவித்தார்கள். அது நாட்டையே வெட்டுவதில் முடிந்தது.

**'சந்தேகக் கறை விழத்தான் வேண்டுமா?'**

வந்தே மாதரத்தின் எஞ்சிய வரிகளைப் பாடக்கூட இப்போது எதிர்ப்பு தெரிவிக்கிறார்கள். இது எங்கே போய் முடியுமோ என்ற கவலை தருகிறது. ஏற்கெனவே ஒரு சிலரது பயங்கரவாத நடவடிக்கைகளால் இஸ்லாமிய சமூகத்தினர் மீது சந்தேகக் கறை விழும் அவலநிலை ஏற்பட்டுள்ளது. இப்போது வந்தே மாதரப் பாடலைப் பாடமாட்டோம் என்று சொல்வது அவர்களின் தேச பக்தியைக் கேள்விக்குறியாக்கும் நிலையை ஏற்படுத்தி விடுமோ என்ற அச்சத்தை உண்டாக்குகிறது.

வெள்ளையருக்கு எதிரான அறப்போராகக் கருதப்பட்டது. தமிழ்நாட்டிலும் கூட நவாப் அப்துல் ஹக்கிம், தென்காசி மு.ந.அப்துல் ரகுமான், அப்துல் ஹமீது பாகவி (முஸ்லிம் லீக் தலைவர் அப்துல் சமதின் தந்தை) முதலானோர் கதராடைகளைத் தயாரித்து, மக்களுக்கு இலவசமாக வழங்கினர்; கதர்ச் சட்டை மட்டுமே அணியக்கூடியவர்களின் திருமணங்களில் மட்டுமே கலந்து கொண்டனர்.

ஒரு குறிப்பிட்ட பாடலைப் பாடுவதில் தான் நாட்டுப் பற்று இருக்கிறது என்று சொல்வது அறிவுபூர்வமான வாதமில்லை. நம் நாட்டின் தேசிய கீதமான 'ஜன கன மன' பாடுடவோ, சுதந்திர, குடியரசு தினங்களில் தேசியக் கொடியை ஏற்றி, கொடியின் சின்னத்தைச் சட்டையில் அணியவோ எந்த முஸ்லிமும் தயங்கியதில்லை. இந்த ஆண்டுகூட எங்கள் தமிழக முஸ்லிம் முன்னேற்றக் கழகம், சுதந்திர தினத்தன்று கொடியேற்றி இனிப்புகள் வழங்கியதோடு, அரசு மருத்துவமனைகளுடன் இணைந்து ரத்ததான முகாம்களை நடத்தியது. இவற்றில் பெண்கள் உட்பட சுமார் 1500 பேர் ரத்ததானம் செய்தனர். நாட்டுப் பற்றிலும், நாட்டுக்காக உயிரைக் கொடுப்பதிலும் முஸ்லிம்கள் யாருக்கும் சளைத்தவர்கள் அல்லர்.

ரவீந்திரநாத் தாகூர், நேதாஜிக்கு எழுதிய ஒரு கடிதத்தில், பங்கிம் சந்திரர் இயற்றிய வந்தே மாதரம் பாடல் இந்து கடவுளான துர்க்கையைத் தாய்நாடாக உருவகப்படுத்தி எழுதப்பட்டது என்றும், இந்தப் பாடலை முஸ்லிம்கள் பாட வேண்டும் என்று நிர்ப்பந்திப்பது அவர்களது மத நம்பிக்கைக்கு விரோதமானது என்றும் குறிப்பிட்டுள்ளார். அதற்கும் ஒருபடி மேலே சென்று, வந்தே மாதரம் பாடலுக்கு ஆனந்த மடம் என்ற நவீனத்தில் வேண்டுமானால் இடமிருக்கலாமே ஒழிய, பல்வேறு மத நம்பிக்கைகளைக் கொண்ட இந்திய நாடாளுமன்றத்தில் அதற்கு இடமிருக்க முடியாது என்றும் தாகூர் ஆணித்தரமாக வாதிட்டுள்ளார்.

இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் நம் நாட்டு மக்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர் விரும்பும் மதத்தைப் பின்பற்றவும் அதனைப் பரப்பவும் உரிமை அளித்துள்ளது. இறைவனைத் தவிர வேறு யாரையும் வணங்கக் கூடாது என்பது முஸ்லிம்களின் அடிப்படை நம்பிக்கை. முஸ்லிம்கள் தாங்கள் பெரிதும் மதிக்கும் நபிகள் நாயகத்தைக்கூட வணங்குவதில்லை. அப்படி இருக்கும்போது, வந்தே மாதரம் பாடலை முஸ்லிம்கள் கட்டாயமாகப் பாட வேண்டும் என்பது அரசியல் அமைப்புச் சட்டத்துக்கே முரணானது.

**'அரசியல் அமைப்புச் சட்டத்துக்கே முரணானது!'**

சந்திப்பு:

**எஸ். சந்திரமௌலி**

# கிளம்புகிறார் கிரண் மோரே!

"நான் இந்திய அணியில் இருப்பது யாருக்கோ' பிடிக்கவில்லை. 'அதனால் நான் என்னால் தொடர்ந்து விளையாட முடியவில்லை."

இந்தியக் கிரிக்கெட் அணி தேர்வில் நடக்கும் கண்ணாமூச்சி விளையாட்டில் மீண்டும் மீண்டும் பலியாடாக்கப் பட்டிருக்கும் கங்கூலி சமீபத்தில் இவ்வாறு பேட்டியளித்தார்.

கிரேக் சேப்பலின் விரலசைவுக்குக் கட்டுப்படுகிறார் என்று நீண்ட காலமாகக் குற்றம் சாட்டப்பட்டு வரும் கிரண் மோரேவின் சீஃப் செலக்டர் பதவிக்காலம் இந்த மாதத்தோடு முடியப் போகிறது.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, மத்திய மண்டலம் என இந்திய கிரிக்கெட்டைத் தமது வசதிக்காக ஐந்தாகப் பிரித்துள்ளது இந்திய கிரிக்கெட் போர்டு. ஒவ்வொன்றுக்கும் ஒரு செலக்டர். இவர்களில் கிரண் மோரேவுக்கும் தெற்கு மண்டலப் பிரதிநிதியான தமிழ்நாட்டைச் சேர்ந்த வி.பி. சந்திரசேகருக்கும் இந்த மாதத்தோடு பதவிக் காலம் முடிவடைகிறது.

அடுத்து கிரண் மோரேவின் சீட்டில் அமரப் போகிறவர்களின் லிஸ்டில் முதல் இடத்தில் இருப்பது திலீப்வெங்சர்க்காரின் பெயர். ஆனால் பி.சி.சி.ஐ.யின் முரண்பாடான விதிமுறைகளுக்கு இவர் கட்டுப்படுவாரா என்று பலர் சந்தேகம் எழுப்புகின்றனர்.

பி.சி.சி.ஐ.யில் பணிபுரியும் ஐந்து செலக்டர்களுக்கும் சம்பளமாக ஒரு ரூபாய்கூடத் தரப்படுவதில்லை. காபி, டீ, பிஸ்கெட் மற்றும் போக்குவரத்துச் செலவுகளுக்கு மட்டும் கிள்ளித் தருவார்கள். கடனில் தத்தளிக்கும் வெஸ்ட் இண்டீஸ் கிரிக்கெட் போர்டுகூட அதன் செலக்டர்களுக்குப் பண முடிப்பு தரும்போது பி.சி.சி.ஐ.யும் தமது செலக்டர்களுக்குப் பணம் தர வேண்டும் என்கிற கூக்குரல் பலமாக எழுந்துள்ளது.

தென் மண்டல விதிமுறைகளின்படி அடுத்தது ஹைதராபாத் பிரதிநிதி ஒருவரே வி.பி. சந்திரசேகருக்குப் பதிலாகத் தேர்வு செய்யப் பட வேண்டும். இந்த போஸ்ட்டுக்கு வெங்கடபதி ராஜு தேர்வாகலாம். இந் நிலையில் இரண்டு மில்லியன் டாலர் கேள்விகள் எழுகின்றன.

கங்கூலி டீமில் மீண்டும் நுழைய தடைக்கல்லாக இருந்த மோரேவின் பதவிக்காலம் முடிவு பெறுவது கங்கூலிக்குச் சாதகமாக அமையுமா?

வி.பி. சந்திரசேகர் செலக்டர் சீட்டில் இருந்தபோதும் தமிழ்நாட்டுக்கு எந்த நன்மையும் விளையவில்லை. எனில், இனி தமிழக வீரர்களின் நிலை என்ன?

இது முடிவல்ல; ஆரம்பம்!

**- ச.ந.கண்ணன்**



களுடன்தான் இருக்கிறது. அதுதான் கலை வடிவத்தின் இயல்பும்கூட.

நவீன கவிதை தனக்கென ஒரு மொழியினைக் கொண்டுள்ளது. செய்தியின் கனத்தைப் பொருத்து மொழியின் கனமும் கூடும்.

இந்தச் சிக்கல் தமிழில் மட்டுமன்று; எல்லா மொழிகளிலும் நவீன படைப்புகள் இது



# புரியாத மொழியில் எழுதப்படுவதுதான் நவீன கவிதையா?

நவீன படைப்புகளைத் தொடர்ந்து வாசித்துக் கொண்டிருக்கும் வாசகத் தளம் இதுபோன்ற புகார்களைச் சொல்வதே இல்லை. போதுமான அளவு பயிற்சி இல்லாத, துறை ஆர்வம் குறைவாக உள்ள தரப்பிலிருந்தே இந்தக் கேள்வி கேட்கப்படுகின்றது.

நவீன கவிதை, இன்று நேற்றைய சமாசாரம் அன்று; நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் விஷயம். இது காளமேகத்திடமிருந்தே தொடங்கிவிட்டது என்பேன். காளமேகத்திடம் ஆரம்பம் கொண்ட நவீன கவிதை, ந.பிச்சமூர்த்தியிலிருந்து வேகம்கொண்டு இன்று வரை தொடர்கிறது.

அகவயமான தேடல்களையும், சிந்தனை மார்க்க வளர்ச்சியையும் பெற்றுள்ள இந்த நவீன கவிதையின் தளம், சற்றுக் கடினமான கோட்பாடு போன்ற விமர்சனத்துக்கு உள்ளாகவே செய்கின்றன.

நவீன சினிமாவுக்கும்கூட இதே சிக்கல்தான். நவீனம் சம்பந்தமான ஒரு மயக்கத்துக்கு, வாசிப்புத்திறன் குறைவும் பரிச்சயக் குறைவுமே காரணங்களாகும்.

நல்ல ஆங்கிலப் புலமை இருப்பதால் ஒருவர் 'ரிலேட்டிவிட்டி' தியரியைப் புரிந்துகொள்ள முடியும் என்று சொல்லிவிட முடியாது, அல்லவா?

அவ்வளவு ஏன்? மரபுக் கவிதைகளை, உரைகளின் துணை இல்லாமல் வாசித்துப் புரிந்துகொள்பவர் எத்தனை பேர்?

ஒவ்வொரு கவிஞனுக்கும் ஒரு சொல்முறை உண்டு. அது புரிந்தால், கவிதை புரியும். வாசிப்பு அனுபவத்துக்கு ஒவ்வொரு வாசகனும் தன்னைத் தயார்படுத்திக் கொள்வது அவசியமானதாகிறது.

தமிழ்த் திரைப்படங்களையே எடுத்துக்கொள்வோம். கறுப்பு - வெள்ளை தொடங்கி இன்றுவரை எத்தனையோ

யுவன் சந்திரசேகர்

மாற்றங்கள். அதைப் புரிந்து கொள்ள, அதன் தொழில்நுட்ப மாற்றங்களை உள்வாங்கிச் சிலாகிக்க முடிந்த நாம், இலக்கிய மாற்றங்களை, அதன் தன்மையைப் புரியவில்லை, தெரியவில்லை என்று ஒதுக்கிப் புகார் கூறுவது எந்த வகையில் சரி?

எந்தவொரு வாசகனும் கவிதையோடு பயணிக்க வேண்டும். நவீன கவிதைகளில் வாசகன் தொடர்ந்து சஞ்சாரம் செய்து கொண்டிருந்தால் அதன் எளிமை துவங்கும்.

**"பாடல்களைப் புரிந்து கொள்ளலாம்; கவிதைகளை முடியாது!"**

பாடல்களைப் புரிந்துகொள்வது போல கவிதைகளைப் புரிந்துகொள்ள எளிதில் இயலாதுதான். ஏனெனில் பாடல் வேறுவகை, கவிதை வேறு வகை.

நவீன படைப்புகள் மீது வாசகர்கள் தீவிரம் கொள்ளாமைக்கு நம் ஊடகங்களையும், பல்கலைக்கழகங்களையும்கூட காரணமாகச் சொல்லலாம்.

நூற்றாண்டுகள் பாரம்பரியம் கொண்ட நவீன கவிதைக்கு நமது பல்கலைக் கழகங்கள் போதுமான இடம் கொடுக்கவில்லை.

பெரும் பத்திரிகைகளில் நவீன எழுத்தாளர்கள் எழுதினால் கூட அவர்களும் சினிமா சம்பந்தப் பட்டவர்களாகவே இருக்கிறார்கள்.

இவைபோன்ற குறைகள் அகற்றப்பட்டால், நவீன படைப்புகள் தங்குதடையின்றி வாசகனைச் சென்றடையும். அதே போல் நவீன கவிதை ஒரே வாசிப்புக்கான விஷயம் மட்டுமில்லை. அது பன்முக அணுகுமுறையைக் கொண்டது. மீண்டும் மீண்டும் வாசிக்க, அதோடு பயணிக்க அது இலகுவாகும். 'புரியுமாறு எழுது' என்று சொல்வது அபத்தம். பொழுதுபோக்குக்காக படிப்பவருக்கு நவீனம் புரியாதுதான்.

**- அருணா செந்தில்குமரன்**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.